அருண வெளியீடு

# பண்டைய மனிதன்

ஆக்கியோர்:


கே. குழந்தைவேலு (பி. ஏ. ஆனர்ஸ்)






அருண பப்ளிகேஷன்ஸ்

தியாகராயநகரம் :: சென்னை-17.

# பதிப்புரை

மனித இனத்தின் வரலாற்றைத் தமிழர் அனைவரும் ஓரளவாவது அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தின் பயனாக, வெளிவருகின்றது பண்டைய மனிதன் எனும் இந் நூல். இன்று நாகரீகத்தின் முதிர்ச்சியில் இருப்பதாகக் கருதிக் கொள்ளும் நாம், இந்த நாகரீகத்தை நம் முன்னோர்கள் பல்லாயிர ஆண்டுகளாக, எங்ஙனம், எத்தனை துயரங்களுக்கிடையில், படிப்படியாக வளர்த்தனர் என்பதை அறிந்துகொள்வதன் மூலமே, அடுத்துவரும் புதிய பரம்பரையினருக்கு, நாமும் சிறந்த பண்பாடுகளை வகுத்துத் தரவும், நம் வாழ்க்கையைச் செப்பமாக வகுத்துக் கொள்ளவும் இயலும். இவ்வகையிலே, ஆங்கில மொழியில், பேராசிரியர் ஹென்ட்ரிக் வான் லூன் முதலாக, எத்தனையோ ஆராய்ச்சியாளர்கள் சிறந்த நூல்கள் பலவற்றை ஆக்கியுள்ளனர். அவையனைத்தின் சாரமாக, இனிய எழிய தமிழ் உறைநடையில் இந்நூலைத் திறம்பட அமைத்து தந்துள்ளனர் திரு. கே. குழந்தைவேலு அவர்கள், பயன்மிக்க இம் முயற்சியில் தளராது ஈடுபட்டு, மிகச் சுருங்கிய முறையில் பண்டைய மனிதஇன வரலாற்றைக் கோவையாகத் தந்துள்ள அவர் முயற்சிக்கு நம் தமிழகம் பெரிதும் கடப்பாடுடையது.

அவர்க்கு எம் நன்றி. ஆர்வத்தோடு இந்நூலைத் தமிழரிடையே படைக்கின்றோம். விரும்பி வாங்கிக், கற்றுப் பயனெய்துவர் என்பது, எங்கள் நம்பிக்கை.

பதிப்பாளர்




# உள்ளுறை

பக்கம்




# பண்டைய மனிதன்

அருமை இளைஞர்களே!

நீங்கள் பாலவயதடைந்திருக்கிறீர்கள். அதி சீக்கிரத்தில் நீங்கள் வளர்ந்துவிடுவீர்கள். வீட்டைவிட்டு வெளியேறி உங்களுடைய சொந்தவாழ்வைத் தொடங்குவீர்கள். நான் உங்களுக்கு என்ன உதவி செய்யமுடியும் என்று அதிசயித்துக் கொண்டே, அந்த நாளைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தேன். கடைசியாக, எனக்கு ஓர் எண்ணம் உதயமாயிற்று. மனித இனத்தின் வளர்ச்சியைப் பற்றியும், அநுபவங்களைப் பற்றியும், நன்றாகத் தெரிந்திருக்க வேண்டியது அவசியமானது. உங்களுக்கு, எனத் தனியாக ஒரு வரலாற்றை நான் ஏன் உருவாக்கக் கூடாது?

என் உறுதுணையான பேனா, மின் விளக்கு, ஒரு கத்தைக்காகிதம் இத்துடன் வரலாற்றுச் சுவடியின் முதல் அத்தியாயம் உருவாக ஆரம்பிக்கிறது. எண்ணியபடி எல்லாம் நடந்தால் இன்னும் அத்தியாயங்கள் பல வளரும். கடந்த ஆறுயிரம் ஆண்டுகளைப்பற்றி நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியவைகளை அந்த அத்தியாயங்கள் சொல்லும்.

நீங்கள் படிக்க ஆரம்பிப்பதற்குமுன் நான் செய்ய இருப்பதைப் பற்றி விளக்கிவிடுகிறேன்:

நான் உங்கட்குப் படைக்க இருப்பது ஒரு பாடப் புத்தகமோ அல்லது படங்களின் 'பைண்டு வால்யூமோ'

அல்ல. வழக்கத்தில் இருக்கும் வரலாற்றின் ஒழுங்கான தொகுப்பாகக் கூட அது இருக்காது.

'சென்ற காலம்' ஒரு பரந்த வெளி. அந்தப் பரந்த வெளியில் பறந்து திரிந்து, துருவித்துழாவி ஆராயவேண்டிய பகுதிகள் ஏராளம். அங்கே உங்கள் அனைவரையும் அழைத்துச் செல்லுகின்றேன்.

எங்கோ தொலைதூரத்தில் தோன்றி, கண் காணாத இடத்தில் கலக்கும் 'முதலும் முடிவுமில்லா' வியத்தகு ஆறுகள் பலவற்றைக் காட்டுகின்றேன்.

பார்ப்பதற்குப் பளபளப்பாகத் தோன்றும் இனிய இடங்களுக்கு—ஆனால் அதன் கீழே பயங்கரப் பள்ளம், படுகுழி, இவற்றின் அருகே உங்களை அழைத்துச் செல்வேன்.

சுற்றுப்புறத்திற்குச் சிகரம் வைத்தாற்போல், தனித்து உயர்ந்திருக்கும் பாறைகளைக் கடப்பதற்காக ஆங்காங்கே பழக்கப்பட்ட பாதையை விட்டு விலகவேண்டியிருக்கும்;

அதிர்ஷ்டம் நம்மை அணைத்துக் கொள்ளாவிடில் சில சமயம் அறியாமை என்னும் அடர்ந்த புதர்களில் நாம் அகப்பட்டுக் கொள்ள நேரிடும். பரந்த வெளி பாலைவனமாக இருக்கக்கூடும்; பழகிப்போன கொள்கைகள் என்னும் பனிப்புயல் வீசினாலும், சொந்த விருப்பு வெறுப்புக்கள் சிலவற்றாலும். ஆகையால், எங்குச் சென்றாலும், நல்லறிவையும், மனிதத் தன்மையையும் உடன்கொண்டு செல்லுதல் வேண்டும். இவையன்றி, மனிதத் தன்மையில் நம்பிக்கை இழந்தால், தம்பிகளே, அதைக்காட்டிலும் ஒருகேடு நமக்கு இல்லை

நானே தான் சிறந்த வழிகாட்டி எனப் பாவனை செய்யவில்லை. உங்களுக்கு, ஏதாவது விளக்கம் தேவைப்பட்டால், இதற்குமுன் இதே பாதையில் சென்றவர்களைக்

கலந்து கொள்ளுங்கள். அவர்களுடைய குறிப்பை என்னுடையவற்றுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். இது உங்கட்கு வேறுவிதமான முடிவைக்கொடுத்தால் அதற்காக நிச்சயமாக நான் உங்களிடம் கோபம் கொள்ளமாட்டேன்.

இதற்கு முன்பும் நான் உங்களுக்குப் போதனை புரிந்ததில்லை. இன்றும் உங்களுக்குப் போதனை புரியவில்லை.

பொதுப் பணியில் உங்கள் பங்கைத் தைரியமாக ஏற்றுக் களிப்புடன் முடிக்க வேண்டும். உலகு உங்களிடம் எதிர்பார்ப்பது அதுதான் என்பது உங்களுக்கு நன்றாகத் தெரியும்.

இந்த ஏடுகள் உங்களுக்கு உதவினால் அதுவரையில் நலமே. உங்கட்கும், உங்களுடன் இந்தப் பயணத்தில் பங்கு கொள்ள இருக்கும் சிறுமிகளுக்கும், சிறுவர்கட்கும் என் உள்ளார்ந்த அன்புடன் இந்த வரலாற்றுச் சுவடியைப் படைக்கின்றேன்.

# வரலாற்றுக்கு முந்திய மனிதன்

ஸ்பெயினிலிருந்து மேற்கிந்தியத் தீவுகளுக்குச்செல்ல நான்கு வாரங்கள் ஆயின கொலம்பஸுக்கு. ஆனால், நாமோ பதினாறு மணி நேரத்தில், பறக்கும் விமானத்தில் கடலைக் கடந்துவிடுகிறோம்.

ஒரு புத்தகத்தின் கைப் பிரதி எடுக்க மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் தேவைப்பட்டன, ஐந்நூறு ஆண்டுகட்கு முன்பு. இன்றோ, லினோ டைப் இயந்திரத்தாலும், 'ரோட்டரி' அச்சாலும் புதிய புத்தகத்தை இரண்டு நாட்களில் அச்சடித்துவிடலாம்.

உடற்கூறு, விஞ்ஞானம், உலோக நூல் இவைபற்றி ஏராளமாகத் தெரிந்திருக்கிறோம். விஞ்ஞானத்தில் ஆயிரக்கணக்கான கிளைகள் பற்றி நாம் நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கின்றோம். கடந்தகால மனிதர்கட்கு இவற்றின் பெயர்களைப்பற்றிக்கூடத் தெரியாது.

நாம் எங்கிருந்து வந்தோம் என்பதுபற்றி நமக்குத் தெரியாது—இந்த விஷயத்தில் ஆதிகாலத்து மனிதர்கள் போலவே நாமும் அறியாமையிலிருக்கிறோம். மனித இனம் பூமியில் தன் வாழ்வைத் தொடங்கியது எப்படி, ஏன், எப்பொழுது என்பவை பற்றி நமக்குத் தெரியாது. நம் கையிலிருக்கும் எத்தனையோ ஆயிரக்கணக்கான உண்மைகளை வைத்துக் கொண்டும், பழையநாள் கற்பனைக் கதைகளில் ஆரம்பிப்பது போலவே 'முன்னொரு காலத்தில்

ஒரு மனிதன் இருந்தான்' என்றுதான் நாம் தொடங்கு கிறோம்

இந்த மனிதன் பல நூறுயிரக் கணக்கான ஆண்டு களுக்கு முன்பே வாழ்ந்தான். அன்று அவன் எதைப் போலத் தோற்ற மளித்தான்?

நமக்குத் தெரியாது. அவனுடைய படத்தை நாம் ஒருபொழுதும் பார்த்ததில்லை. புராதன மண்ணின் ஆழத்திலிருக்கும் களிமண்ணில் அவனுடையபிணத்தின் சில துண்டுகளை நாம் சில சமயம் பார்க்கிறோம். உலகி லிருந்து நெடுநாட்களுக்கு முன்னே மறைந்துவிட்ட எத்த னையோ மிருகங்களின் எலும்புக் குவியலுள் புதைந்து கிடந்து நாம் கண்டெடுத்த சில எலும்புகளின் உதவி கொண்டு நம் மூதாதையர் யாராக இருந்திருக்கக் கூடும் என்ற முடிவுக்கு வரலாம்.

மனித இனத்தின் முதல் மனிதன் கவர்ச்சியும், அழ கும் அற்ற, குட்டிபோட்டுப் பால் கொடுக்கும் பிராணியா யிருந்தான். உருவில் சிறிதாக இருந்தான். சூரிய வெப் பமும், குளிர்காற்றின் கடுமையும், அவன் தோலை அடர்ந்த பழுப்பு நிறமாக ஆக்கின. அவன் தலையும், உடலும் நீண்ட உரோமத்தால் மூடப்பட்டிருந்தன. குரங்கைப் போன்று மெலிந்த, ஆனல் உறுதியான விரல்களையுடை யவனுக இருந்தான். அவன் நெற்றி தாழ்ந்திருந்தது. பற்களையே காண்டியாகவும் கத்தியாகவும் உபயோகிக்கும் காட்டு மிருகத்தைப் போல் முகவாய்க்கட்டை விளங் கியது.

ஆடைகள் அணியவில்லை அவன். புகையாலும், தண லாலும் பூமியை நிரப்பி வெடித்துக் கிளம்பும் எரிமலையின், தீப்பிழம்பையன்றி வேறு நெருப்பைக் கண்டதில்லை, அவன்.

அடர்ந்த காடுகளில் படர்ந்த இருட்டில் அவன் வாழ்ந்தான். பசிக்கும் வேளையில் பச்சைக் கிழங்குகளையும் இலைகளையும் தின்றான். பறவைக் கூட்டிலிருந்து அதன் முட்டைகளையும் திருடித் தின்றான்.

எப்பொழுதாவது, நீண்டநேர வேட்டைக்குப் பிறகு சிறிய காட்டு நாய், எலி அல்லது பூச்சி இவற்றைப் பிடிப்பான். வரலாற்றுக்குமுந்தியகால மனிதனுக்கு உணவைச் சமைக்கத் தெரியாது. ஆதலால், அவற்றை அவன் பச்சையாகவே சாப்பிட்டான்.

நாம் காணும் மிருகங்களின் பற்களைப் போல் அவனுடைய பற்கள் நீண்டிருந்தன. பகற்பொழுதில் இந்த ஆதி மனிதன் தனக்கும், தன் மனைவி மக்கட்கும் இரைதேடிச் சுற்றித் திரிந்தான்.

இரவு நேரத்தில் இரைக்காகத் திரியும் மிருகங்களின் பயங்கரக் கூச்சலைக் கேட்டு அவன் வளைந்த மரத்தினடியிலாவது அல்லது குகைகளிலாவது ஒளிந்துகொண்டான்.

கோடை வெய்யிலில் காய்ந்தான். குளிர்காலப் பனியில் உறைந்தான். அவன் அடிபட்டபொழுது அவனைப்பற்றிக் கவலைகொள்ள யாரும் இல்லை. அபாயம் ஆட்டிவைக்கும்பொழுது தன் இனத்தவருக்குத் தெரியப்படுத்தச் சிலபல ஒலிகளை எழுப்ப அவன் கற்றுக்கொண்டான். அயலவரைக் கண்டு குரைக்கும் நாயைப்போலிருந்தது அவனது இச் செயல். எத்தனையோ விஷயங்களில் நன்றாகப்பழக்கப்பட்ட நாயைக்காட்டிலும் கீழாகவே அவன இருந்தான்.

மொத்தத்தில், ஆயிரக்கணக்கான எதிரிகளின் மத்தியில், பயங்கரப் பற்களை யுடைய புலி, ஓநாய், கரடி இவற்றால் கொல்லப்பட்ட தன்னினத்தவரைப் பார்த்துக்

கொண்டே பசியும் பயங்கரமும் நிறைந்த உலகில் வாழ்ந்த அம் மனிதன் ஒரு பரிதாபப் பிராணியாகவே இருந்தான்.

இந்த மனிதனின் முந்திய வரலாறு பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. ஆயுதங்கள் கிடையாது அவனுக்கு; வீடுகட்டவில்லை அவன். அவன், வாழ்க்கையைப்பற்றிய ஆதாரம் எதுவுமின்றியே வாழ்ந்தான்; இறந்தான். அவன் எலும்பின் வாயிலாக வரலாறு காண்கிறோம், ஏறத்தாழ இரண்டாயிரம் நூற்றாண்டுகட்கு முன் அவன் வாழ்ந்ததாக. எஞ்சிய பகுதி இருளிலிருக்கிறது.

கடைசியாக, புகழ்பெற்ற கற்காலத்திற்கு வருகிறோம். நாகரிகத்தின் அடிப்படைக் கொள்கைகளைக் கற்றுக் கொண்டவன் கற்கால மனிதன்.

இந்தக் கற்காலத்தைப் பற்றிச் சற்று விரிவாகவே கவனிப்போம்.

# உலகம் உறைகிறது

பருவத்தில் ஏதோ மாறுதல்! பண்டைய மனித னுக்குக் 'காலம்' என்பது என்னவென்றே தெரியாது. பிறந்த நாள், திருமண ஆண்டு விழா அல்லது இறந்த நேரம் இது பற்றிய குறிப்பு எதுவுமே அந்த மனிதனிட மில்லை.

நாள், வாரம், ஆண்டு இவற்றைப் பற்றிய எண்ணமே அவனுக்கில்லை. காலைப்பரிதி கண்டதும் மறுநாள் விடிந் தது என்று அவன் கூறவில்லை. 'அது வெளிச்சம்' என் ருன். காலைக் கதிரவனின் ஒளியில் தன் குடும்பத்திற்காக உணவு தேடினுன். இரவு வந்ததும் தன் மனைவியிடமும் மக்களிடமும் வந்து பகலில் சேகரித்த உணவைப் பங் கிட்டுக் கொடுத்து அதே பச்சைக் கறியைத் தானும் உண்டு உறங்கினுன்.

பொதுவாக,காலத்தை ஒட்டியே அவன் வாழ்ந்தான். கடும்பனிக் காலத்தைத் தொடர்ந்து இளவேனிற் காலம். அது கொதிக்கும் கோடையாக மாறும். அப்பொழுது பழங்கள் பழுக்கும். கதிர்கள் நன்கு முற்றிப் பறித்துண் ணும் நிலையிலிருக்கும், இலையுதிர் காலம் ஆரம்பமாகிறது. மிருகங்கள் தங்கள் குகைகளில் புகுந்து நீண்ட தூக்கத் திற்கு ஆயத்தம் செய்கின்றன. கோடை முடிகிறது. இவை யெல்லாம் அனுபவம் அவனுக்குக் கற்பித்தவை.

எப்பொழுதும் அதே மாதிரியாகவே இருந்தது. முதல் மனிதன் இந்த வெப்பம், குளிர் இவற்றின் மாறு

தல்களை ஏற்றுக் கொண்டான். ஏன் என்ற கேள்வி இல் லாமலேயே அவன் வாழ்ந்தான். அதுவே அவனுக்கு இன்ப மாக இருந்தது.

திடீரென, அவன் கவலைகொள்ளும் அளவிற்கு ஏதோ ஒன்று நடந்தது.

கோடை காலத்து வெப்பமான நாட்கள் காலம் தாழ்த்தி வந்தன. பழங்கள் பக்குவமில்லாமலேயே இருந் தன. பசுமையான புல் அடர்ந்திருக்கும் மலை உச்சிகள் பனிப்படலத்தில் மறைந்து கிடந்தன.

ஒரு நாள் காலை, அவன் வாழ்ந்த பள்ளத்தாக்கிலுள் ளவர்களைக் காட்டிலும் முற்றிலும் மாறுபட்ட வேற்று மனிதர்கள், மலையுச்சியிலிருந்து அவனை வந்தடைந்தனர். ஒருவராலும் புரிந்துகொள்ள முடியாத ஒலிகளை எழுப்பி னார்கள். அவர்கள் ஒல்லியாயும், பட்டினி கிடந்தவர்கள் போலும் தோன்றினர்கள். பசியும், பனியும், அவர்களை மூல இடத்திலிருந்து விரட்டியதுபோல் தோன்றியது.

ஏற்கனவே வாழ்ந்தவர்களுக்கும், வந்தவர்களுக்கும் சேர்த்து பள்ளத்தாக்கில் உணவு கிடைக்கவில்லை. சில நாட்களுக்கு அதிகமாக அவர்கள் தங்க முயற்சித்தனர். பயங்கரச் சண்டை நடந்தது. அநேக குடும்பங்கள் கொல்லப்பட்டன. மற்றவர்கள் காட்டிற்குள் ஓடி மறைந்து விட்டனர். மறுபடியும் காணப்படவில்லை.

நீண்ட நாட்களுக்குக் குறிப்பிடக் கூடியது ஒன்றும் நடக்கவில்லை. ஆனல், பகற்பொழுது குறுகி இராப் பொழுது முன்னைவிட அதிகக் குளிராகவேயிருந்தது.

கடைசியாக, இரண்டு உயர்ந்த குன்றுகளுக்கிடையே உள்ள வெளியில் ஒரு சிறு பசும் பனித்துளி காணப் பட் டது. ஆண்டுகள் செல்லச் செல்ல அச் சிறு துளி உருவில்

பெரியதாகியது. மிகவும் மெதுவாக ஒரு பெரிய பனிப் பாளம் மலை முகட்டிலிருந்து நழுவி விழுந்து கொண்டிருந் தது. பெரும் பாறைகளைப் பள்ளத்தாக்கிற்குள் தள்ளி யது. பயத்தினல் நடுநடுங்கித் தூங்கிக் கொண்டிருந்த மக்களின் மீது இடியோசையுடன் விழுந்து அவர்களைக் கொன்றுவிட்டது. மனிதன், மிருகம் இருவரிடத்தும் இரக்கமின்றியிருந்த அந்தப் பனிப்பாளம், நூற்ருண்டுக் கணக்காக இருந்த மரங்களைத் தூள் தூளாக்கிப் பற்றி எரி யும் கட்டையாக்கிற்று.

கடைசியாக, பனி பெய்ய ஆரம்பித்தது. மாதக் கணக் கில் பனி பெய்து கொண்டேயிருந்தது.

புல், பூண்டுகள் அழிந்தொழிந்தன. மிருகங்கள், சூரிய வெளிச்சத்தைக் காணத் தெற்கு நோக்கி ஓடிவந்தன. பள்ளத்தாக்கு, குடியிருப்பு அற்ற வெளியாயிற்று. மனிதர் கள் தங்கள் குழந்தைகளை முதுகில் சுமந்து கொண்டு, ஆயுதமாக உபயோகப்படுத்திய ஒரு சில கற்களையும் எடுத்துக் கொண்டு புதுமனைகாண வேற்றிடம் சென்ற னர்.

அந்தக் குறிப்பிட்ட நேரத்தில் உலகில் அதிகக் குளிர்வந்த காரணம் நமக்குத் தெரியாது. அதன் கார ணம் என்ன என்று நம்மால் எண்ணிப் பார்க்கக்கூட முடியவில்லை.

படிப்படியாகக் குறைந்துவந்த வெப்ப, தட்ப நிலை, மனித இனத்திற்குப் புது அநுபவமாக இருந்தது.

ஒவ்வொருவரும் இறந்து விடுவார்கள்போல் தோன் றியது. கடைசியில் அவர்களடைந்த துன்பம் நன்மை யாகவே முடிந்தது. வலுக் குறைந்தவர்களைக் கொன்று விட்டது. அதனல் உயிரோடிருந்தவர்களுக்கும் வேறு வழி காணுவிட்டால் தாங்களும் அழியநேரிடும் என்பதை அது உணர்த்திற்று.

திடீர்ச் சாவு, கடினமான சிந்தனே இவை இரண்டிற்கு மிடையே உழன்ற மனிதன் முதன் முதலில் கல்லேக் கத்தியாகப் பயன் படுத்திய மூளையின் துணையால் அதற்கு முன் தன் மூதாதையர் கண்டறியாத பல துன்பங்களேத் துடைக்கக் கற்றுக் கொண்டான்.

முதன் முதலில், அவன் உடை பற்றிக் கவலே கொண்டான். மேலே மூடிக் கொள்ள எதுவுமின்றி அதிகக் குளிரால் அவதிப்பட்டான். வடபகுதியில் வாழ்ந்த காட்டு எருமை, கரடி மற்ற மிருகங்கள் எல்லாம் கனத்த ரோமத்தால் தங்களேக் குளிரினின்றுங் காத்துக் கொண்டன. மனிதனுக்கு அந்த மாதிரி ஆடையில்லே. அவனுடைய தோல் மிருதுவாக இருந்ததால் அதிகம் துன்பப்பட்டான்.

இந்தக் குறையை மிக எளிய வழியில் தீர்த்துக் கொண்டான். அவன் ஒரு குழிதோண்டி இலேதழை, கொடிகளால் அந்தக் குழியை மூடினன். அவனல் தோண்டப்பட்ட அந்தக் குழியில் ஒரு கரடி வந்து வீழ்ந்தது. அது உணவின்றி வாடும்வரை காத்திருந்து பெருங் கற்களால் அதை அடித்துக் கொன்ருன். மிகவும் கூர்மையான ஒரு கல்லின் துணைகொண்டு கரடியின் முதுகைக் கிழித்துத் தோலே எடுத்தான். பிறகு அதைச் சூரிய வெப்பத்தில் உலரவைத்தான். தன் உடலேச் சுற்றி அதை மூடிக் கொண்டான், கரடிக்கு வெப்பம் தந்து காத்த அந்தத் தோல் அவனுக்கும் வெப்பந்தந்தது; இன்பமளித்தது.

அடுத்தபடியாகத் தங்குமிடம்: அநேக மிருகங்கள் குகைகளில் தூங்கும் பழக்கத்தைக் கொண்டிருந்தன. மிருகத்தைப் பார்த்து மனிதனும் காலியான ஒரு குகைக்காகத் தேடினன். அங்கு வௌவாலும், மற்றும் பூச்சிகளும் இருந்தன. அதைப்பற்றி ஆரம்பத்தில் அவன் கவலேகொள்ளாமல் அவற்றுடன் சேர்ந்து குகையில்

வாழ்ந்தான். புது இடம் அவனுக்குப் போதிய அளவு வெப்பம் அளித்தது.

அடிக்கடி, இடி இடிக்கும்பொழுது மரங்கள் மின்னலால் தாக்குண்டன. சில சமயங்களில் காடு முழுவதுமே தீப்பற்றி எரிந்தது. மனிதன் அந்தக் காட்டுத் தீயைக் கண்டான். அவன் காட்டுத்தீயின் அருகில் வரும்போது அதன் வெப்பம் அவனைத் துரத்தியது. தீ வெப்பத்தைக் கொடுக்கும் என்பதைக் கண்டான்.

இதுவரை அவன் விரோதியாக இருந்த தீ இப்போது அவன் நண்பனாக ஆயிற்று. குகைக்குக் கொண்டுவரப்பட்ட மரத்தில், எரியும் காட்டிலிருந்து எடுந்துவந்த குச்சியால் தீயை உண்டாக்கினான். இதுவரை இல்லாத—ஆனால், இன்ப மளிக்கும்—வெப்பத்தைக் கொடுத்தது.

நீங்கள் சிரிக்கக்கூடும். இவையெல்லாம் மிகவும் எளிதாக நமக்குத் தோன்றும். ஏனெனில், எத்தனையோ காலத்திற்கு முன்பு யாரோ ஒருவன் இவைபற்றி நினைக்கத்திறம் படைத்திருந்தான். மின்சாரத்தின் உதவியால் வெளிச்சம் தரும் முதல் வீட்டைக் காட்டிலும், பழங்கட்டை உண்டாக்கிய வெளிச்சத்தைப் பெற்ற முதற் குகை அதிகக் கவனத்தை ஈர்த்தது.

கடைசியாக, மிகவும் புத்திசாலியான ஒருவன் உண்ணுமுன் பச்சைக்கறியைத் தீயிலிடும் பழக்கத்தைத் தோற்றுவித்ததன்மூலம் மனித அறிவிற்கு ஆக்கமளித்தான். இவை எல்லாங் கண்டு குகை மனிதன் நாகரிகத்தின் உச்சியை அடைந்ததாக எண்ணினான்.

இக்காலத்தில், அற்புதமான கண்டுபிடிப்பைக் கேட்டுப் பெருமையடைகிறோம். "மனிதன் இன்னும் என்ன கண்டுபிடிக்க இயலும்?" எனக் கேட்கிறோம். களிப்புடன் புன்சிரிப்புக் கொள்கிறோம். மிகவும் குறிப்பிடத் தகுந்த

காலத்தில் நாம் வாழ்கிறோம். நம் விஞ்ஞானிகளும், பொறியியலாரும் தோற்றுவித்த புதுமைகளைப்போல் இதுவரை யாரும் செய்ததில்லை.

நாற்பதாயிரம் ஆண்டுகளுக்குமுன் உலகமேஉறைந்து அழிந்துவிடும் நிலையில் இருந்தது. நாகரிகமற்ற காட்டுமிராண்டியான குகை மனிதன், தன் பழுப்பு விரல்களால், குற்றுயிரும் குலை உயிருமாக இருந்த கோழிக்குஞ்சின் உடலைக் கூரிய பற்களால் கடித்து, எலும்பையும், ரோமங்களையும், தனக்கும் தன் குடும்பத்திற்கும் படுக்கையாக இருந்த அதே தரையில் எறிந்தான். தீ பச்சைக் கறியைப் பதமாக்கி உருசியுள்ள உணவாக்கும் என்பதைக்கண்டதும் களிபேருவகை கொண்டான்.

அவனுக்கு உணவாக உதவிய மிருகங்களின் எலும்புத்துண்டு, ஓய்வின்றிப் பறக்கும் சிறிய நாய்களைப் போன்ற வெளவால், அலைந்து திரியும் எலி, பூனை இவற்றின் நடுவே படுத்துக்கொண்டு "என்ன அற்புதமான காலம்" என்று தன்னுடைய நிலையை எண்ணிக் கனவு கண்டிருந்திருப்பான்.

சுற்றியிருந்த பாறையின் அமுக்கத்தால் குகை அடிக்கடி விரிவுண்டது. அப்பொழுது மனிதன் தன்னால் கொல்லப்பட்ட மிருகத்தின் கதியை அடைகின்றான். ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு மண்வெட்டி, தள்ளுவண்டி இவற்றுடன் புதைபொருள் ஆராய்ச்சியாளர் வருகிறார். அவர் தோண்டித் துருவிக் கடைசியாக பழம்சோகக் கதையைக் கண்டுபிடித்தார். அதன் உதவியால்தான் அவற்றைப்பற்றி நான் உனக்குச் சொல்ல முடிகிறது.

# கற்காலத்தின் முடிவு

அதிகக் குளிராக இருந்த காலத்தில் மனிதன் தன் வாழ்விற்காகப் பயங்கரமாகப் போராடினன். புதையுண்டிருக்கும் சில மனிதர்கள், மிருகங்கள் இவற்றின் எலும்புகளிலிருந்து அந்த மாதிரி இனமே உலகிலிருந்து அழிந்து விட்டது என்பது தெரியவருகிறது.

எல்லா இனமும், கிளையும்—தேவை, பசி, பனி இவற்ருல் ஒழிக்கப்பட்டு விட்டன. முதன் முதலில் குழந்தைகள், பிறகு தாய் தந்தையர் இவ்வாறு இறந்தனர். பாதுகாப்பின்றி விடப்பட்ட குகைகளில் குடியேறத்தொடங்கிய காட்டு மிருகங்கள் கிழவர்களைக் கொன்றன. பருவநிலையில் மாறுபாடு ஏற்படும் வரை, கடுங் குளிர் வாழ்க்கைக்குப் பயனற்றதாகி காட்டு மிராண்டிகளை ஆப்பிரிக்காவின் நடுக்காட்டிற்குள் துரத்தி அங்கேயே எப்பொழுதும் இருக்கும் நிலையை ஏற்படுத்தி விட்டது.

வரலாற்றின் இந்தப்பகுதி மிகவும் கடினமானது. ஏன் எனில் நான் குறிக்கவேண்டிய மாற்றங்கள் மிகவும் மெதுவாகவும், படிப்படியாகவும் உண்டாயின.

இயற்கை அன்னை எப்பொழுதும் அவசரத்தில் காரிய மாற்றியதில்லை. தன் எண்ணத்தைப் பூர்த்தி செய்துகொள்ள வேண்டிய எல்லா வசதிகளும் வாய்க்கப் பெற்றிருந்ததால், தேவையான மாற்றங்களை நன்கு கவனித்துச் செய்ய அவளால் முடிந்தது.

பனிப்பாறை பள்ளத்தாக்குகளை மூடி ஐரோப்பாவின் பெரும்பாகத்தைக் கவரும் பொழுது வரலாற்றுக்கு முந்திய மனிதன் சுமார் நான்கு தலைமுறை வாழ்ந்தான்.

அந்தக் கடைசிக்காலம் முப்பதாயிரம் ஆண்டுகட்கு முன் முடிவுற்றது. அந்தக் காலத்திலிருந்து மனிதன் தான் வாழ்ந்ததற்கு அடையாளமாக ஆயுதங்கள், படங்கள் இவற்றை விட்டுச் சென்றிருக்கின்றான். பொதுவாக, அதிகப் பனிக்காலம், காலங்கடந்த ஒன்றாகக் கருதப்பட்டதிலிருந்து வரலாறு ஆரம்பமாகிறது எனக் கூறலாம்.

முடிவில்லாத வாழ்க்கைப் போராட்டம் உயிரோடிருந்தவர்களுக்கு எத்தனையோ விஷயங்களைக் கற்றுக் கொடுத்திருக்கிறது.

உருக்கு ஆயுதங்கள் நம்நாளில் பயன் படுவதுபோல கல்லும், கட்டையாலான ஆயுதங்களும் அதிகம் பயன் படுத்தப்பட்டன. கரடு முரடாயிருந்த கோடரிக்குப் பதில், செய்வதற்குச் சிரமமான, மிகவும் நேர்த்தியான, பளபளப்பான கோடரி இருந்து வந்தது. ஆரம்ப காலத்திலிருந்து எந்த மிருகங்களுக்காகப் பயந்து வந்தானோ அந்த மிருகங்களைத் தாக்க இந்தக் கோடரியைப் பயன் படுத்தினான்.

காட்டு யானை காணப்படவில்லை.

பனிக்கரடி துருவப் பிரதேசத்திற்குத் திரும்பி விட்டது.

புலி ஐரோப்பாவை விட்டுச் சென்றது.

குகைக் கரடி சிறுபிள்ளைகளைத் தின்பதில்லை.

உயிர்வாழும் பிராணிகளில் உதவியற்றதும் மிகவும் பலமற்றதுமான—மனிதனின் மூளை பலத்தால் மற்றப் பிராணிகளின் எஜமானனுகும் அளவிற்குப் பயங்கரமான அழிவைத் தரக்கூடிய ஆயுதங்களைக் கண்டு பிடித்தான்.

இயற்கையை முதன் முதலில் வெற்றி கண்டான். ஆனுல் அதைத் தொடர்ந்து அநேக வெற்றிகள் வர இருந்தன.

வேட்டையாடுவதற்கும், மீன்பிடிப்பதற்கும் தேவையான எல்லா ஆயுதங்களுடனும் குகை மனிதன் புதிய தங்குமிடம் தேடினுன்.

ஆற்றின் படுகையும், ஏரிக்கரையும் முறையான வாழ்க்கை நடத்துவதற்குத் தகுந்த இடமாக அமைந்தன.

பழைய குகைகள் பாலைவனமாக்கப் பட்டன. மனித இனம் தண்ணீரைத் தேடி நகர்ந்தது.

இப்பொழுதெல்லாம் மனிதன் கனத்த கோடரியை உபயோகிக்கக் கற்றுக் கொண்டான். மரங்களை வெட்டி வீழ்த்துவது மிகவும் கடினமாகத் தோன்றவில்லை.

எத்தனையோ காலத்திற்கு முன்பிருந்து பறவைகள் குச்சி, புல் முதலியவற்ருல் மரக்கிளைகளில் வசதியான கூடுகட்டிக் கொண்டு வாழ்கின்றன.

மனிதன் பறவையைப் பின்பற்றினுன். அவனும் ஒரு கூடுகட்டி அதை 'வீடு' என்றழைத்தான். ஆசியாவில் சில இடங்களைத் தவிர, மிகவும் சிறிதாகவும், வீடுகட்ட உதவாததுமான மரங்களை அவன் உபயோகப் படுத்தவில்லை.

காடுகளில் கட்டைகளை வெட்டினான். அவற்றைக் கால்வாய்த் தண்ணீரில் மிதக்கவிட்டு எடுத்துச்சென்றான். கட்டைகளின் உச்சியில் மரத்தாலான பலகையைப் பரப்பி அதன்மீது அவன் தன் முதல் மரவீட்டைக் கட்டினான்.

பழைய குகையைக் காட்டிலும் அது பன்மடங்கு வசதியுடையதாயிருந்தது. இந்த வீட்டைக் காட்டு மிருகங்கள் உடைத்து உட்புக முடியாது. திருடர்களும் நுழைய முடியாது. வேண்டிய அளவிற்கு மீன்களைத் தரும் ஏரி வற்றாத வைப்பிடமாக இருந்தது. குகை வீட்டைக்காட்டிலும் மரங்களின் மேல் கட்டப்பட்ட வீடு நலம் பயப்பதாயிருந்தது. அதனால் குழந்தைகள் உரமுள்ளவராக வளர வாய்ப்பிருந்தது. இவ்வாறு மக்கள் தொகை மெதுவாக வளர்ந்தது. காலத்தின் தொடக்கத்திலிருந்து காலியாக இருந்த பரந்த வெளியெல்லாம் மனிதர்கள் வசிக்கத் தொடங்கினர்.

இவற்றின் நடுவே புதிய கண்டுபிடிப்புக்கள் பெருகின. அவை வாழ்க்கையை வளமாக்கி வசதிபலதந்து, அச்சத்தையும் அபாயத்தையும் குறைத்தன.

புதிய கண்டுபிடிப்புக்கள் எல்லாம் பெரும்பாலும் மனிதனின் திறமையான மூளையின் உதவியால் அல்ல. அவன் மிருகங்களைக் 'காப்பி' அடித்தான்.

கோடை காலத்தில் அதிகமாகக் கிடைக்கும் பழம், கொட்டை முதலிய உணவுப் பொருள்களைக் குளிர் காலத்திற்காகச் சேமித்து வைக்கும் எத்தனையோ மிருகங்களைப் பற்றி உங்களுக்குத் தெரியுமே! தோட்டம் துறவுகளில் உள்ள தங்கள் கூடுகளில் குளிர் காலத்திற்காக உணவைச் சேகரித்து வைக்கும் அணிலைப் பார்!

அணிலைக் காட்டிலும் எத்தனையோ விதத்தில் குறைமதியுடைய ஆதிமனிதனுக்குத் தன் எதிர்காலத்திற்காக

எப்படிச் சேமித்து வைப்பது என்பதே தெரியாமலிருந்தது. தன் பசியாறும்வரை புசித்து எஞ்சியுள்ளதை, தனக்குத் தேவையில்லாததை அப்படியே கெட்டுப் போகும்படி விட்டுவிட்டான். இதன் விளைவாகக் குளிர் காலத்தில் உணவில்லாமல் வாடினான். அவன் குழந்தைகளில் அநேகம் பசியால் துடி துடித்து உயிரிழந்தன.

மிருகங்களைப் பின்பற்றி, அறுவடைக் காலத்தில் அதிகமாயிருக்கும் தானியத்தைச் சேமிக்க மனிதன் ஆரம்பித்தான். கோதுமை முதலிய தானியங்கள் ஏராளமாகக் கிடைத்தன.

முதன் முதலில் பானையையும் அதன் உபயோகத்தையும் கண்டுபிடித்த அறிஞன் யார் என்று நமக்குத் தெரியாது. ஆனால், அவனுக்குச் சிலை செய்து வைத்துப் போற்ற வேண்டும்.

அநேகமாக, அடுக்களையில் வேலை பார்க்கும் பெண் ஒருத்தி, தன் வேலைகளைக் குறைக்க வழி தேடியிருந்திருக்க வேண்டும். சூரிய வெப்பத்தால் களிமண் கடினமான பொருளாக ஆவதைப் பார்த்தாள் அவள். சிறிது களிமண்ணைச் செங்கல்லாக மாற்ற முடிந்தால், கொஞ்சம் குவிந்த களிமண்ணும் அதேமாதிரி மாறும் என்பதை அறிந்தாள். அந்தச் செங்கல் படிப்படியாகப் பானையாக மாறியது. மனித இனம் மறுநாளைக்காக உணவைச் சேகரிக்க அது உதவியது.

என்னுடைய இந்தக் 'கண்டுபிடிப்புக்கள்' எல்லாம் மிகைப்படக் கூறப்படுபவை என்று நீ நினைத்தால் உண வருந்தும் இடத்தில் நீ பார். வெவ்வேறு உருவத்தில் உள்ள பாண்டங்களின் உபயோகம் என்ன என்பதை யோசித்துப் பார்.

உனக்கு உணவு ஒரு தட்டில் பரிமாறப் படுகிறது. அவ்வுணவு பானையிலிருந்து பரிமாறப்படுகிறது. அவை அடுக்களையிலிருந்து சாப்பிடு மிடத்திற்கு ஒரு தட்டில் வைத்து எடுத்து வரப்படுகின்றன. சைஞ ஜாடியில் உனக்குப் பால் தரப்படுகிறது. பிறகு உன் சேமிப்பு அறைக்குப் போ. (உன் வீட்டில் அந்த அறை இல்லாவிட்டால் பக்கத்திலுள்ள கடையின் சேமிப்பு அறைக்குப் போ) நாளைக்கு நமக்குத் தேவை யான உணவு, அடுத்த வாரம், அடுத்த ஆண்டு இவற் றிற்குத் தேவைப்படும் சாமான்க ளெல்லாம் எப்படிப் பத்திரமாக ஜாடிகளிலும், டப்பாக்களிலும் மற்றப் பாத்தி ரங்களிலும் சேர்த்து வைக்கப் பட்டிருக்கிறது என்ப பதைப் பார். இயற்கை அளித்தவை அல்ல அந்தச் சேமிப்புக் கலங்கள். ஆண்டு முழுதும் தனக்குத் தேவையான உணவு கிடைக்கும் வரை மனிதன் தன் சொந்த முயற்சியால் பாடுபட்டுக் கண்டுபிடித்தவைதான் அவைகள்.

தொட்டிகள் எல்லாம் பெரிய பானையைப் போன் றவைகளே. அவைகள் இரும்பினுல் செய்யப்பட்டுள்ளன. சைஞப்பாத்திரம் போல் இரும்பு சீக்கிரம் உடைவதில்லை. களிமண்ணைக் காட்டிலும் இருக்கம் அதிகமாயும் இருக்கி றது. அதே போலத்தான் இரும்புக் குழாய்கள், பாட் டில்கள், பானைகள், சட்டிகள் எல்லாம். இப்பொழுது அதிக மாகக் கிடைக்கும் பொருள்களைச் சேமித்துவைத்து, வருங் காலத்தில் நமக்கு அளிக்கும் வேலையைச்செய்ய இவைகள் பயன்படுகின்றன.

தனக்குத் தேவைப்படும்பொழுது உதவுவதற்காக உணவுப் பொருளைக் காப்பாற்ற முடியுமாதலால் மனிதன் காய்கறிகளையும், தானியங்களையும் பயிர்செய்து எஞ்சியதை வருங்காலத் தேவைக்காகச் சேமித்து வைத்தான்.

பிற்காலத்தின் கடைசிக்காலத்தில் முதன் முதலாக கோதுமை வயலேயும், தோட்டத்தையும் மரவீடுகளேயும் சுற்றியிருக்கக் கண்டோம். அதன் காரணம் இப்பொழுது நமக்குத் தெரிகிறது. மனிதன் அலேந்து திரிவதைவிட்டு ஒருகுறிப்பிட்ட இடத்தில் தங்கி, தன் குழந்தைகளே தான் இறக்கும் வரை வளர்த்து, அதன்பின் தன் மக்களுக் கிடையே அவன் புதைக்கப்பட்டதையும் நமக்குத் தெரி விக்கிறது. தாங்கள் வாழ்ந்தவழி விடப்பட்டிருந்ததாலே நம் மூதாதையர்கள் காட்டு வாழ்க்கையைக் கைவிட்டிருப் பார்கள் என்று சொல்லலாம்.

ஆனல் அவர்களின் தனிமைக்கும் ஒரு முடிவு ஏற்பட் டது.

யாருக்கும் தெரியாத தென்னுட்டிலிருந்து ஒரு பிர யாணி, கொந்தளிக்கும் கடல், மலேப்பாதைகள் இவற்றைத் துணிவுடன் கடந்து மத்திய ஐரோப்பாவில் வாழ்ந்த காட்டுமிராண்டிகளிடம் வந்தான்.

அவன் முதுகில் ஒரு பெரிய சுமையைச் சுமந்து கொண்டிருந்தான். தன் சுமையை இறக்கிப் பொருள்களே விரித்தான். கனவிலும் கண்டிராத அந்தப் பொருள்களேக் கண்ட அந்த ஆதிவாசிகள் அகன்ற கண்களுடன் ஆச் சரியமாகப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

பித்தளேச் சம்மட்டிகள், கோடரிகள், இரும்பினுல் செய்த ஆயுதங்கள், செம்பினுல் செய்த தொப்பிகள், பல வித நிறங்களே உடைய அழகான அணிகள் முதலியவற் றைப் பார்த்தனர். அதன் பெயர் 'கண்ணுடி' என்று சொன்னுர்கள்.

அந்த இரவுடனே கற்காலம் முடிந்துவிட்டது. பல நூற்றுண்டுகளாகப் பழக்கத்திலிருந்த கல், கட்டை, ஆயு

தங்களைப் புறக்கணித்து விட்டு ஒரு புதிய நாகரிகம் இந்நாள் வரை பழக்கத்திலிருக்கும் 'உலோகத்திற்கு' அடி கோலியது.

இந்தப் புதிய நாகரிகத்தைப் பற்றித்தான் நான் இனி மேல் சொல்லப்போகிறேன். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு வடகண்டத்தை விட்டு விட்டு நாம் எகிப்துக்கும், மேற்கு ஆசியாவுக்கும் செல்வோம்.

"இது நேர்மையானது அல்ல. வரலாற்றுக்கு முந்திய மனிதனைப்பற்றிச் சொல்வதாக வாக்களித்துவிட்டு, சுவையான கட்டத்தில் நிறுத்திவிட்டு, உலகின் மற்றொரு பாகத்திற்குத் தாவுகிறீர்கள். நாங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நாங்களும் உங்களுடன் வரத்தான் வேண்டும்!" என்று நீங்கள் கூறலாம்.

எனக்கும் தெரியும், அது நேர்மையான வழி அல்ல என்று. வரலாறு கணிதத்தைப்போன்றதன்று.

கணக்குப் போடும் பொழுது "அ" விலிருந்து, "ஆ" விற்கும், 'ஆ' விலிருந்து 'இ'க்கும், "இ'யிலிருந்து 'ஈ—க்கும் இப்படியாகக் கணித்துக் கொண்டே செல்லலாம். இதற்கு மாறாக வரலாறு 'அ' விலிருந்து 'ஔ' விற்கும், மறுபடியும் 'இ'—யிலிருந்து 'ஊ' விற்குமாக ஓர் ஒழுங்கிற்கும், கட்டுப்பாட்டிற்கும், அடங்காமல் செல்லுகிறது.

இந்த ஒழுங்கீனத்திற்கு நல்ல காரணங்கள் இருக்கின்றன. வரலாறு துல்லியமான விஞ்ஞானம் அல்ல. வரலாறு கூறும் கதை மனித இனத்தைப் பற்றியது. என்னதான் நாம் மாற்ற முயன்றாலும் பெரும்பாலான மக்கள் ஒரு சில கட்டுத்திட்டங்களுக்கு உட்பட்டு நடக்க மறுக்கின்றனர்.

ஒரே காரியத்தை எந்த இரண்டு மனிதனும் ஒரே மாதிரியாகச் செய்ததில்லை; செய்யவும் இயலாது.

ஒரே முடிவை எந்த இரண்டு மனிதனும் அடைந்தது மில்லை.

நீ வளர வளர இவை பற்றி உனக்கு நன்றாகத் தெரியும்.

சில நூற்றுண்டுகளுக்கு முன்னும் இதே நிலைதான். இதற்கு முன் கூறியபடி, ஆதிமனிதன் முன்னேற்றப் பாதையில் நடந்துகொண்டிருந்தான். பனி, கடுங்குளிர், காட்டு மிருகங்கள் இவற்றினின்றும் தன்னைப் பாதுகாக்க வெகு சிரமப்பட்டான். அதுவே பெரியகாரியமாக இருந்தது அவனுக்கு.

மிகவும் உபயோகமான பல சாமான்களை அவன் கண்டு பிடித்தான்.

எப்படியோ, திடீரென்று உலகின் மற்றப் பகுதியிலுள்ள மக்கள் இங்கு வந்து குடியேற ஆரம்பித்தனர். மிகவும் குறுகிய காலத்தில், அதி வேகத்தில் உலகில் அதற்கு முன் யாரும் கண்டிராத ஒரு புதிய உன்னதமான நாகரிகத்தை அடைந்தனர். தங்களைக் காட்டிலும் குறைந்த மதிப்புள்ளவர்களுக்கு தாங்கள் கற்றதையெல்லாம் கற்பித்தார்கள். இதுபற்றி உங்களுக்கு, இப்பொழுது விவரமாகச் சொல்லிவிட்டேன். எகிப்தியர்கள், மேற்கு ஆசிய மக்கள் இவர்களைப்பற்றி இனி கூறவேண்டியது அவசியந்தானே?

# மனித இனம்

## முதற் கொள்கை

செயலாற்றும் காலம் ஈன்றெடுத்த குழந்தைகள் நாம். 'ஆட்டோமோ பைல்ஸ்' என்று நாம் அழைக்கும் அழகான சிறு ஊர்திகளில் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பிரயாணம் செய்கிறோம். ஆயிரம் மைல்களுக்கும் அப்பாலுள்ள நம் நண்பர்களுடன் பேச விரும்பினால், ஒரு குழாய்க்குள் 'ஹல்லோ' என்று கூறிச் சிகாகோவிலுள்ள ஒரு தொலை பேசியின் எண் கேட்கிறோம். இரவு நேரத்தில் அறை இருட்டாயிருக்கும் பொழுது ஒரு பொத்தானை அமுக்கினால் அறை வெளிச்சமாகிறது. மிகவும் குளிராக இருந்தால் மற்றொரு பொத்தானை அமுக்கினால் மின் அடுப்பின் இதந்தரும் வெப்பம் படிக்கும் அறையிற் பரவி சூடு கொடுக்கிறது. அதே நேரத்தில் கோடையில் அதிக வெப்பமாயிருக்கும் பொழுது இதே மின் கதிர்கள் மின்சார வீசிரியின் மூலம் நமக்குக் குளிர்ச்சியையும் தந்து வசதியளிக்கிறது. இயற்கையின் பல்வேறு இயக்கங்களுக்கும் நாமே எஜமானாக இருக்கிறோம். நமக்குப் பணிவான அடிமை மாதிரி அவைகளை நமக்காக உழைக்கும்படி செய்திருக்கிறோம்.

நம்முடைய உன்னதமான சாதனைகளைக் கண்டு பொறாமை அடையும்பொழுது ஒரே ஒரு விஷயத்தை மறந்துவிடாதே. உலகத்தின் ஆதி மனிதர்களால் சிரமப்பட்டுத் தோற்றுவிக்கப்பட்ட அறிவின் அடிப்படை

யில் தான் நாம் இன்று பெருமைகொள்ளும் நாகரிகத்தைத் தோற்றுவித்திருக்கிறோம். இனிமேல் வர இருக்கும் வேடிக்கையான பெயர்களைக் கண்டு பயப்படாதீர்கள்.

பாபிலோனியர்கள், எகிப்தியர்கள், சால்டியர்கள், சுமேரியர்கள் எல்லாம் மாண்டு மடிந்து போனவர்கள் தான். ஆனால் நாம் எழுதும் கடிதங்கள், பேசும்மொழி, பாவம், அல்லது உயர்ந்த கட்டிடம் இவை கட்டுவதற்கு முன் நாம் விடுவிக்கவேண்டிய எத்தனையே கணக்குகள், சுருங்கக்கூறின் நம் வாழ்வின் எல்லாத் துறைகளிலும் அவர்களின் சாயல் படிந்திருக்கிறது. உலகம் உள்ளளவும் விண்ணிற்கு வெளியே பூமி சுற்றிக்கொண்டு வரும் வரையிலும் நம் பெருமைக்கும் மதிப்புக்கும் தகுதியுள்ளவர்களாக அவர்கள் இருக்கிறார்கள்.

நான் உங்களுக்குக் கூறப்போகும் இந்தப் பழங்கால மக்கள், குறிப்பிட்ட மூன்று இடத்தில் வசித்தார்கள். நீண்டு பரந்த ஆற்றங்கரைகளிலும், ஆற்றோரத்திலும் இரண்டு பிரிவினர் வாழ்ந்தனர். மூன்றாவது பிரிவினர் மத்தியதரைக் கடற்கரைப் பிரதேசங்களில் வாழ்ந்தனர்.

எகிப்தில் நைல்நதிப் பள்ளத்தாக்கில்தான் பழம் பெரும் நாகரிகம் பிறந்து வளர்ந்தது. இரண்டாவதாக, மெசபடோமியா என்று அழைக்கப்படும், மேற்கு ஆசியாவில் இருபெரு நதிகளுக்கு இடையே உள்ள வளமான வெளியில் வளர்ந்தது, நாகரிகம். மூன்றாவது, பொனிசியர்களால் ஆக்ரமிக்கப்பட்ட மத்திய தரைக் கடற்கரைப் பிரதேசம். உலகத்தின் ஆதி குடியேற்ற மக்கள் இவர்கள் தான். உலகத்தின் ஏனைய பாகத்திற்கு ஒழுக்கத்தின் உயர்விற்கு அதன் கொள்கைகளை ஈந்தவர் இவர்களே. நாகரிகத்தின் மூன்றாவது இடம் அதனுடைய பழைய பாபிலோனியப் பெயரான சூரி அல்லது சிரியா என்ற பெயரால் குறிக்கப்படுகிறது.

இந்தப் பிரதேசங்களில் வாழ்ந்த மக்களின் வரலாறு ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கும் அதிகமாகப் பரவிக் கிடக்கின்றது. இது மிகவும் சிக்கலான வரலாறு. இதைப் பற்றிய முழுவிபரமும் உங்களுக்குத் தர இயலாது. அவர்களடைந்த அனுபவம், வெற்றி முதலியவைகளை ஒன்று சேர்த்துத் தருகிறேன், கதைகளில் வரும் மாயச் சமுக்காளம்-இவை-போன்று இருக்கும் இந்தக் கதை.

"இயேசு பிறப்பதற்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன், மத்தியதரைக் கடலின் கீழைக்கரைப் பிரதேசத்தை உரோமானியர்கள் வென்றனர். புதிதாகச் சேர்க்கப்பட்ட இந்தப் பிரதேசத்தில் எகிப்து என்னும் நாடும் ஒன்று. நம் வரலாற்றில் முக்கிய அங்கம் வகிக்கும் உரோமானியர்கள் செயலாற்றும் வலிபடைத்த இனத்தவர்களாயிருந்தனர். பாலங்கள் கட்டி, சாலைகள் அமைத்து நன்ருகப் பழக்கிய சிறுபடை, அலுவலாளர் இவர்களைக் கொண்டு ஐரோப்பாவின் பெரும்பகுதி, ஆப்பிரிக்காவின் கிழக்குப் பகுதி, ஆசியாவின் மேற்குப்பகுதி ஆகியவற்றை ஆண்டு வந்தனர். கலையும், விஞ்ஞானமும் அவர்களின் கவனத்தைக் கவர்ந்ததாகத் தெரியவில்லை. குழல் நன்ருக வாசிக்கத் தெரிந்தவர்களையோ அல்லது அருவியைப் பற்றி அழகான பாட்டியற்றக் கூடியவரையோ, அவர்கள் சந்தேகித்தனர். மேலும் சாதாரண மனிதர்களைக் காட்டிலும் சிறிது அதிகமாக அறிவு படைத்தவர்கள் என்றே எண்ணினர். கயிற்றின்மேல் நடக்கவும், நாயை அதன் பின்னங்கால்களில் நிற்கவைக்கவும் அவர்களுக்குத் தெரியும் என்றும் நம்பினர். இம்மாதிரியான செயல்களைத் தாங்கள் விரும்பாத கிரேக்கர்களுக்கும் கீழ்த் திசை மக்களுக்கும் விட்டுவிட்டனர். ஆயிரக்கணக்கான மைல்கள் பரப்புடைய தங்கள் நாட்டை ஆளவே அவர்கள் பொழுதைச் செலவழித்தனர்.

எகிப்தில் முதன்முதலாக நுழைந்த பொழுது, அது மிகவும் பழமை வாய்ந்ததாகவே இருந்தது. எகிப்திய மக்களின் வரலாறு ஆரம்பித்து ஆறுயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கும் மேலாகிவிட்டது. டைபர் நதியின் சதுப்பு நிலக்களத்தில் நகரம் நிர்மாணிக்கக் கனவு காண்பதற்கு வெகு நாட்களுக்கு முன்பே, எகிப்திய மன்னர் ஒரு பரந்த பூமியை ஆண்டு, நாகரிகத்தின் நடு நிலைக்களமாக ஆக்கினர். கல்லாலான ஆயுதத்தை வைத்துக் கொண்டு உரோமானியர்கள் ஓநாயையும், பன்றியையும் விரட்டிக் கொண்டு காட்டுமிராண்டிகளாக வாழ்ந்த காலத்தில் எகிப்தியர்கள் புத்தகங்கள் எழுதிக் கொண்டிருந்தனர். தங்கள் குழந்தைகளுக்குக் கணக்குச் சொல்லிக் கொடுத்தும், மிகவும் சிக்கலான ஆயுத அறுப்பு முறையைச் செய்து கொண்டிருந்தனர். இவ்வளவு பெரிய முன்னேற்றத்துக்குக் காரணம் அவர்கள் கண்டுபிடித்த மிக அதிசயமான ஒன்றுதான். தாங்கள் பேசும் பேச்சையும், தங்கள் எண்ணத்தையும் தங்கள் குழந்தைகளுக்கும், பின் வருபவர்களுக்கும் உபயோகப்படும் வழியில் காப்பாற்றிவைக்கக் கற்றுக் கொண்டனர்.

இதைத்தான் 'எழுத்துக் கலை' என்கிறோம், 'எழுத்துடன்' நம் பழக்கம் அதிகமாகி விட்ட காரணத்தால், புத்தகங்கள் நாளிதழ்கள் கதைகள் இல்லாமல் எப்படி மக்கள் வாழ்ந்தனர் என்று நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் அவர்கள் வாழ்ந்தனர். எண்ணங்களை எழுத்து வடிவாக்க முடியாததின் விளைவுதான் இந்தப் பூமியில் அநேக ஆண்டுகள் வாழ்ந்தும் முன்னேற்றம் ஆமை வேகத்தில் இருந்தது. பூனைகளும் நாய்களும் தங்கள் குட்டிகளுக்கு அன்னியரைக்கண்டு குரைத்தல், மரத்தில் ஏறுதல் போன்ற சில சின்ன விஷயங்களைக் கற்றுக் கொடுப்பதில்லை, அதற்கு முடியாத காரணத்தால். எழுத்

தறிவு அற்ற தங்கள் மூதாதையரின் அனுபவத்தைதக்கூற வும், காப்பாற்றவும் வழியில்லாத ஆதிமனிதன் பூனைகளை யும் நாய்களையும் போலவே வாழ்ந்தான்.

இவைகள் எல்லாம் மிகவும் வேடிக்கையாகக்தோன்று கிறதல்லவா? சின்ன விஷயத்தைப் பற்றி ஏன் இவ்வளவு பெரிது பண்ணுகிறோம்? நீ கடிதம் எழுதும் பொழுது என்ன நேருகிறது என்று எப்போதாவது நீ சிந்தித்த துண்டா?

மலையில் சுற்றும்பொழுது நீ ஒரு மானைக்காண்பதாக வைத்துக் கொள்வோம். நகரத்திலிருக்கும் உன் தந்தைக்கு இதைத் தெரிவிக்க உனக்கு விருப்பம். நீ என்ன செய்வாய்? ஒரு துண்டுக் கடுதாசியில் புள்ளிகளை யும் கோடுகளையும், எழுதி உரையின் மீதும் சில கோடு களையும் புள்ளிகளையும் எழுதி இரண்டணு தபால் பில்லை யுடன் தபால் பெட்டியில் கொண்டுபோய் போடுகிருய். உண்மையாகவே நீ செய்தது என்ன? பேசும் வார்த்தை களை அநேக புள்ளிகளாகவும், வளைவுகளாகவும் மாற்றி யிருக்கிருய். தபால்காரனும், உன் அப்பாவும், அந்த வளைவுகளையும் புள்ளிகளையும் பேசும் எழுத்தாக மாற்ற முடியும் என்பது உனக்கு எப்படித் தெரியும்?

பேசும் வார்த்தையை ஒரு குறிப்பிட்ட வரிவடிவத் தில் (எல்லோருக்கும் புரியும்படியாக) எழுத உனக்கு ஒருவர் சொல்லிக் கொடுத்திருக்கிருர்.

சில எழுத்துக்களை எடுத்துக் கொண்டு இந்த முறையை ஒப்பு நோக்கிப்பார். தொண்டையிலிருந்து ஒலி வெளிவருகிறது. நாம் 'ஜி' என்ற எழுத்தை எழுது கிறோம். மூடிய பற்களுக்கு இடையே காற்றுப் புக விடு கிறோம், 'எஸ்' என்று எழுதுகிறோம். வாயை அகலத்

திறந்து நீராவி வண்டிபோல ஒலியை உண்டாக்குகிறோம். அந்த ஒலி 'ஹெச்' என்று விரிவாக்கப்படுகிறது.

இதைக் கண்டுபிடிக்க நூறாயிரக் கணக்கான ஆண்டுகள் தேவைப்பட்டன மனித இனத்திற்கு. இதன் பெருமை எகிப்தியர்களுக்கே உரியது. இந்தப் புத்தகத்தை அச்சிட உதவிய இதே எழுத்துக்களை அவர்கள் உபயோகிக்கவில்லை. அவர்களுக்கே உரித்தான ஒரு முறையைக் கையாண்டனர். நம் முறையைக் காட்டிலும் மிகவும் அழகானது. ஆனால் எளிதானதல்ல. வீடு, தோட்டம் இவற்றைச் சுற்றிலும் உள்ள பல்வேறு பொருள்களின் உருவங்கள், வடிவங்கள் கத்தி, ஏர், பறவை, பானை, சட்டி இவைகளால் ஆன மொழியாக இருந்தது. அவர்களின் எழுத்தான இந்தச் சிறு உருவங்களை கோயில்களின் சுவர்களில் சுரண்டியும், வர்ணம் இட்டும் வைத்திருந்தனர். மற்றும் மறைந்த மன்னர்களின் கல்லறையிலும், பாப்பரைஸ்* மரத்தின் உலர்ந்த சருகுகளிலும் இவைகள் வரையப்பட்டிருந்தன

இந்தப் பரந்த புத்தகசாலையில் நுழைந்த உரோமானியர்கள் உற்சாகத்தையோ உணர்ச்சியையோ காட்டவில்லை. அவர்களுக்கு எனத் தனியான எழுதும் முறை ஒன்றை வைத்திருந்தார்கள். அதுவே மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் மேலானது என எண்ணினர்.

உரோமானியர்கள் கிரேக்கர்களிடமிருந்து எழுத்தைக் கற்றுக் கொண்டனர். ஆனால், அந்தக் கிரேக்கர்கள் முறையே போனிசியர்களிடமிருந்தும், அவர்கள் எகிப்தியரிடமிருந்தும் கடன் வாங்கினர் என்பது உரோமர்களுக்குத் தெரியாது. இதைப்பற்றி அவர்களுக்குத் தெரியாது, கவலைப்படவும் இல்லை, அவர்கள் பள்ளிகளில்

---

* இதிலிருந்துதான் 'பேப்பர்' என்ற பெயர் வழங்கலாயிற்று.

உரோமானிய எழுத்துக்களையே தனிப் பாடமாகப் போதித்தனர். உரோமானியக் குழந்தைகளுக்கு உகந்ததாகத் தோன்றிய அதே எழுத்தை மற்றவர்களுக்கும் கற்பிக்கப்பட்டு வந்தது. உரோமானிய ஆட்சியாளர்களின் புறக்கணிப்பையும், எதிர்ப்பையும் அதிக நாள் சமாளிக்க முடியவில்லை. எகிப்திய மொழியால் நாளடைவில் அது மறக்கப் பட்டு விட்டது. இறந்த காலத்துப் பொருள்களாகி விட்ட எத்தனையோ இந்திய இனத்து மொழியைப்போல மறைந்தொழிந்தது.

உரோமானியர்களுக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த அராபியர்களும், துருக்கியர்களும் அவர்களின் தனிப்புத்தகமான 'கொரானுக்கு' ஒத்துவராத எல்லா எழுத்துக்களையும் வெறுத்து ஒதுக்கினர். கடைசியாகப் பதினரும் நூற்ருண்டின் மத்தியில் எகிப்திற்கு வந்த ஒருசில மேல் நாட்டார்கள் விநோதமான இந்தப் படங்களில், சிறிது அக்கரை காட்டினர். அந்தப் படங்களுக்கு விளக்கம்தர அங்கு யாரும் இல்லை. இந்த ஐரோப்பியர்களும் அவர்களுக்கு முன் இருந்த ரோமானியர்கள், துருக்கியர்களைப் போலவே இருந்தனர்.

பதினெட்டாம் நூற்ருண்டின் கடைசிப் பாகத்தில் போனபார்ட் என்ற பிரஞ்சுத் தளகர்த்தர் எகிப்துக்கு வந்தார். பழம் வரலாறு படிப்பதற்காக அவர் அங்குச் செல்லவில்லை. இந்தியாவிலுள்ள பிரிட்டானிய குடியேற்றப் பகுதிகளைப் படையெடுப்பதற்காக எகிப்திலிருந்து ஆரம்பிக்க அவர் நினைத்தார். படையெடுப்பு நடக்கவில்லை. ஆனல் எகிப்தின் எழுத்தைச் சுற்றியிருந்த சிக்கலை நீக்கப் பெரிதும் உதவியது.

நெப்போலியன் போனபார்டின் வீரர்களில் பிரௌஸ்ஸர்டு என்ற வாலிபன் ஒருவன் இருந்தான். ரோசாட்டா

நதி என்றழைக்கப்படும் நைல்நதியின் மேலே வாயிலி லுள்ள செயின்ட் ஜூலியன் என்ற கோட்டையில் தங்கி இருந்தான். நைல்நதியின் கீழ்ப் பகுதியில் உள்ள பாழ டைந்த வெளிகளில் சுற்றித்திரிவதைப் பெரிதும் விரும் பினன் பிரௌஸ்ஸர்ட். ஒருநாள் அவன் கண்டெடுத்த கல் ஒன்று அவருக்குப் புரியாத புதிராக இருந்தது. அந்த இடத்தைச் சுற்றிலும் இருந்ததுபோல் அந்தக் கல்லின்மேலும் படங்கள் வரையப்பட்டிருந்தன, இது வரை கண்டுபிடிக்கப்பட்ட பொருள்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது இந்தக் கருப்புக்கல். அந்தக் கல்லில் மூன்று எழுத்துக்கள் இருந்தன. அவற்றில் ஒன்று கிரேக்க மொழியில் உள்ள 'என்ன இன்பம்' என்ற எழுத்து.

கிரேக்கமொழி அவனுக்குத் தெரியும். எகிப்தில் கிரேக்கமொழியும் கலந்திருப்பது நிச்சயமாய்த் தெரிகிறது. இதிலிருந்து மொழிக்கு விளக்கம் தருவது ஓரளவுக்கு இயலும் என்ற நிலை பிறந்தது. ஆனல் இந்த விளக்கம் பெருவதற்கு முப்பது ஆண்டுகளுக்கு அதிகமான கடின உழைப்பு தேவைப்பட்டது. ரகசியக்கதவு திறக்கப் பட்டது. எகிப்தின் பழம் பெரும் கலைக்கருவூலம் தன் ரகசியங்களை வெளியாக்கிற்று. எகிப்திய மொழியைக் கண்டுபிடிக்கத் தன் உயிரைக் கொடுத்த உத்தமனின் பெயர் ஜீன் பிராங்கோ சேம்பலின். அவனுக்கு ஒரு தமையன் இருந்தான். அவனும் ஒரு அறிஞன். ஆகை யால் அவனைக் குறிக்கும்பொழுது சேம்பலின் ஜூனியர் என்றே அழைப்பர். பிரஞ்சுப்புரட்சி நடந்தபொழுது சேம்பலின் சிறு குழந்தையாக இருந்ததால் போனபார் டின் படையில் சேருவதினின்றும் தப்பினன். தன்நாட்டு மக்கள் வெற்றிமேல் வெற்றி அடைந்து கொண்டிருக்கும் பொழுது சேம்பலின் எகிப்தின் புராதன கிறித்துவ

மக்களின் 'காப்ட்ஸ்' மொழியைக் கற்றுக் கொண்டிருந்தான்.

பத்தொன்பதாம் வயதில் பிரெஞ்சுப் பல்கலைக் கழகத்தில் வரலாற்ருசிரியராகப் பணியேற்ருன். எகிப்தின் பழம் மொழியான படங்களை மொழிபெயர்க்கும் வேலையைப் பல்கலைக் கழகத்தில் ஆரம்பித்தான். நைல் நதியின் வாயிலில் பிரௌஸ்ஸர்ட் கண்டெடுத்த ரொஸட்டாக் கருங்கல் இதற்குப் பெரிதும் பயன்பட்டது, இந்த மூலக்கல் இன்னும் எகிப்தில் இருக்கிறது. நெருக்கடியான சூழ்நிலையில் நெப்போலியன் நாட்டைவிட்டு வெளியேற வேண்டியிருந்தது. அவன் அந்தக் கல்லை அங்கேயே விட்டுவிட்டான். பிறகு ஆயிரத்து எண்ணூற்று ஓராம் ஆண்டில் ஆங்கிலேயர்கள் அலெக்ஸாண்டிரியாவைக் கைப்பற்றிய பொழுது அந்தக் கல்லைக் கண்டுபிடித்து லண்டனுக்கு எடுத்துச் சென்றனர். இன்றைக்கும்கூட நீங்கள் இந்தக் கல்லைப் பிரிட்டனின் கண்காட்சி சாலையில் காணலாம். எப்படியோ இந்த வடிவங்களின் நகல் எடுக்கப்பட்டு பிரஞ்சில் அந்நகல் சேம்பலியனுல் உபயோகிக்கப்பட் டிருக்கிறது. அக்கல்லின் கிரேக்கச் சொல் நன்ருகத் தெரிகிறது. ஐந்தாம் டாலமியைப் பற்றியும், அவன் மனைவி கிளியோபாத்ராவைப் பற்றியும் கூறுகிறது. ஷேக்ஸ்பியர் எழுதிய கிளியோபாத்ராவின் பாட்டிதான் இவள். கல்லின் மற்ற இரண்டு வடிவங்களும் விளங்குபவையாக இல்லை. அவற்றில் ஒன்று எகிப்தின் பழம்பெரும் மொழியில் இருந்தது. இதற்கு ஹைரோகிளிபிக்ஸ் (**Hierogliphics**) என்று பெயர். ஹைரோகிளிபிக்ஸ் என்பது கிரேக்க மொழியில் புனிதச் செதுக்கல் அல்லது வரைதல் எனப் பொருள்படும். வரைவின் நோக்கத்தையும் வரையப்பட்டதின் காரியத்தையும் விளக்கும் நல்ல பெயராக

இருக்கிறது. இந்தக் கலையைக் கண்டுபிடித்த மதகுருக்கள் பேச்சைக் காப்பாற்றி வைக்கும் இந்தப் புதியவழியை சாதாரண மக்கள் அறிந்துகொள்வதை விரும்பவில்லை. எழுதுவதை ஒரு புனிதத் தொழிலாக ஆக்கினர்.

எழுதுவதை மர்மமான தொழிலாக ஆக்கி அது புனிதமானது, சாதாரண மக்கள் பொதுக் காரியமான வியாபாரம், தொழில் முதலியவற்றிற்கு அதைப் பயன் படுத்தக்கூடாது என்றும் தடுத்தனர். தங்களுக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் தங்கள் நிலத்திலேயே பயிராக்கி வாழும் உழவர்கள் நாட்டில் பெருவாரியாக இருக்கும்வரை எழுதும் தொழில் புனிதமானது என்றுகூறி வெற்றிகரமாக ஏமாற்ற முடிந்தது. நாளடைவில் எகிப்தில் வியாபாரம் பெருகியது. வியாபாரிகள் வெறும் வார்த்தைகளுக்குப் பதிலாக வர்த்தகப் போக்குவரத்துக்கு வேறு சாதனம் தேடியலைந்தனர். ஆகையால் இந்த வியாபாரிகள் துணிவுடன் மதகுருக்கள் பின்பற்றி வந்த அந்த வரி வடிவங்களை தங்களுக்குச் சாதகமாக எளிதான முறையில் ஆக்கிக்கொண்டனர். அதன் பிறகு தங்கள் வியாபார விஷயங்களை 'பழக்கப்பட்ட மொழி' என்றழைக்கப்பட்ட புது வடிவங்களில் எழுதி வந்தனர். இதையே கிரேக்க மொழியில் 'டெமோடிக் மொழி' என்று நாம் குறிக்கிறோம். புனிதமானதும், பழக்கமானதுமான மொழியில் கிரேக்க மொழியிலிருந்து மொழி பெயர்க்கப் பட்டவைகள் அந்த ரோசட்டா கல்லில் இருந்தன. சேம்பலியன் தன் கவனத்தை இந்த மொழி பெயர்ப்பின்மேல் செலுத்தி ஆராய்ந்து வந்தான். தனக்குக் கிடைத்த ஒவ்வொரு எகிப்திய வடிவங்களையும் ஒன்று சேர்த்து ரோசட்டா கல்லுடன் ஒப்பிட்டுப் படித்தான். இருபதாண்டு பொறுமையான உழைப்பின் பயனாய் பதினான்கு வடிவங்களின் அர்த்தத்தைப் புரிந்து

கொள்ள முடிந்தது. அதாவது ஒவ்வொரு வடிவத்தை யும் புரிந்துகொள்வதற்கு ஓர் ஆண்டுக்கு மேலாக உழைத்தான். கடைசியாக எகிப்துக்குச் சென்று ஆயிரத்து எண்ணூற்று இருபத்தி மூன்றும் ஆண்டு (1823) பழைய மொழி என்னும் பொருள்பற்றிய விஞ்ஞான நூல் ஒன்றை வெளியிட்டான். சிறுவனாக இருந்த பொழுதிலிருந்தே தான் கொண்ட கொள்கைக்காக உழைத்த அவன் அதிக உழைப்பின் காரணமாக ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகு இறந்தான்.

ஆனால், அவன் புகழ் அவனுக்குப் பிறகும் வாழ்ந்து வருகிறது. மற்றவர்கள் அவன் விட்டுச்சென்ற வேலையைத் தொடர்ந்தனர். இன்று நாம் செய்தித்தாள்களின் அச்சிட்ட பக்கங்களைப் படிப்பது போல், எகிப்திய ஆராய்ச்சியாளர்கள் அதன் பழம்பெரும் மொழியைப் படிக்கின்றனர்.

இருபது ஆண்டில், பதினான்கு வரிவடிவத்தின் விளக்கம் கண்டது, மிகவும் மந்தமான வேலையாகவே தோன்றும். ஆனால், சேம்பலியன் பட்ட துன்பங்கள் பல. அவற்றைக் கேட்டால் அவன் துணிவைப் போற்றிப் புகழத் தோன்றும் உங்களுக்கு. எகிப்தின் ஆதிவாசிகள் எளிதான அடையாளங்களைக் கொண்ட மொழியை உபயோகிக்கவில்லை. அந்த எல்லையைத் தாண்டிவிட்டனர். அடையாளமொழி என்ன என்று உங்களுக்குத் தெரியும், ஒவ்வொரு இந்தியக் கதையிலும் சிறு படங்களைக் கொண்டு எழுதப்பட்ட கடிதத்தைப் பற்றி ஒரு அத்தியாயம் இருக்கும். சாரணச் சிறுவர்களுக்கெல்லாம் அடையாள மொழி நன்றாகத் தெரியும். ஒரு பையன் தன்னுடைய வாழ்வில் எருமை மேய்ப்பவனாகவோ அல்லது

இந்திய வீரனுகவோ இருக்கும்பொழுது தனக்கென ஒரு அடையாள மொழியைக் கொண்டிருந்தான். ஆனல் எகிப்தியர் இதிலிருந்து மாறுபட்டிருந்தனர். சில படங்களின் உதவியால் நான் விளக்குகிறேன். நீ சேம்பலியனுக இருப்பதாகக் கொள்வோம். நைல் நதிக்கரையில் வாழ்ந்த ஒரு குடியானவனின் கதையைச் சொல்லும் பாப்பரைஸ் ஏட்டைப் படித்துக் கொண்டிருக்கிருய். ரம்பத்துடன் கூடிய மனிதனின் படத்தைப் பார்க்கிருய். குடியானவன் ஒரு மரத்தை வெட்டினுன் என்று கூறு கிருய். பெரும்பாலும் நீ யூகித்தது சரியே. அடுத்த படியாகப் பழைய மொழியின் மற்ருெரு பக்கத்தை எடுக் கிருய். எண்பத்திரண்டு ஆண்டு வாழ்ந்த ஓர் அரசியின் கதையைக் கூறுகிறது, அந்த ஏடு. அந்த ஏட்டின் மத்தியில் முன் கண்ட அதே படம் தென்படுகிறது. இது ஒரு புதிராக இருக்கிறது. அரசிகள் மரம் வெட்டுவ தில்லே. தங்களுக்காக மற்றவர்களைச் செய்யும்படி விட்டு விடுவார்கள். உடல் வலிமைக்காக இளையராணி வேண்டு மாஞல் கட்டையை அறுக்கலாம். ஆனல் எண்பத்தி ரண்டு வயது கிழராணி பூனைக்குட்டி நூற்பு இயந்திரம் இவற்றுடன் தன்வீட்டில் தங்குவாள். இருந்தும் இந்தப் படம் அங்கே இருக்கிறது. இதை வரைந்த மதகுரு ஒரு குறிப்பிட்ட காரியத்திற்காகவே இதைச் செய்திருக்க வேண்டும்.

அவர் என்ன நினைத்திருக்கக் கூடும். இந்தப் புதிரைத்தான் அவன் கடைசியாக விடுவித்தான். (Phonetic writing) 'ஒலி எழுத்து' என்று நாம் குறிப் பிடுவதை முதன் முதல் உபயோகித்தவர்கள் எகிப்தியர் கள் என்பதைக் கண்டுபிடித்தான்.

திட்டவட்டமான எண்ணத்தை வெளிப்படுத்தும் மற்ற வார்த்தைகளைப் போலவே ((Phonetic) போனடிக்

என்ற வார்த்தையும் கிரேக்க மூலத்தைக் கொண்டது. பேச்சின் ஒலிமுறைநூல் என்ற கருத்தைக் கொண்டது. கிரேக்கமொழியில் போன் (Phone) என்பது குரலைக் குறிக்கும். நம் குரலைத் தொலை தூரத்திற்குச் சுமந்து செல் லும் இயந்திரமான 'டெலி போன்' என்பதிலும் போன் (Phone) என்பது கிரேக்க மொழியே.

பண்டைய எகிப்துமொழி ஒலி எழுத்து முறையை உடையது. குகை மனிதன் தன் குகைகளின் சுவர்களில் காட்டு மிருகங்களின் படங்களை வரைந்து அடையாள மொழியுடன் வாழ்ந்ததிலிருந்து வளர்ந்தது.

வயதான அரசியின் கதையின் நடுவில் வந்த, ரம்பத் துடன் கூடிய மனிதனிடம் கவனத்தைத் திருப்புவோம். ரம்பத்துடன் அவன் நிச்சயமாக ஏதோ ஒரு காரியத்திற் காகத் தான் இருக்கிறான். 'Saw' என்பது தச்சன் கடை யில் நாம் காணும் ஒரு ஆயுதம்; அல்லது 'to see' என் பதின் வினைச்சொல். எத்தனையோ நூற்றாண்டுகளாக இந்த வார்த்தைக்கு இதே பொருள் கற்பிக்கப்பட்டு வந் திருக்கிறது. முதன் முதலில் அது ரம்பத்துடன் கூடிய ஒரு மனிதனைக் குறித்தது. அதன் பிறகு தற்கால எழுத்துக்களான எஸ் (s) ஏ (a) டபில்யூ (w) என்றவை ஏற்படுத்தும் ஒலியைக் குறித்தன. கடைசியில் தச்சுத் தொழிலைக் குறிக்கும் பொருள் மறைந்து, வடிவம் 'பார்ப் பதற்கு' என்ற வார்த்தையின் இறந்த காலத்தைக் குறிக் கும் 'பார்த்தேன்' என்ற பொருள்பட வழங்கிற்று.

பழக்கத்திலுள்ள ஆங்கில மொழியின் ஒரு வரியைப் பண்டை எகிப்திய வடிவங்களில் ஆக்கி நான் விளக்கு கிறேன். நம் முகத்தில் பார்ப்பதற்கு உதவியாயிருக்கும் இரண்டு கண்களையோ அல்லது எழுதுகின்றவருடை யவோ, பேசுகின்றவருடையவோ 'நான்' என்ற தன்னிலை

யைக் குறிக்கும் படம் ஒன்று. இரண்டாவது தேனைச் சேர்த்து வைத்து நாம் பிடிக்கச் செல்லுகையில் கையில் கொட்டும் ஒரு பூச்சியையோ அல்லது 'இருப்பதற்கு' என்ற வினைச்சொல்லின் மற்றொரு பொருள்படும் 'இருந்த' என்னும் பொருள் தரும். 'வருவதற்கு', 'வைத்திருக்க' என்ற வினைச்சொற்களின் முதற்பாகத்தையும் அது குறிக்கலாம். ஆனால், இந்தப்படத்தில் தேனீயுடன் லீவ் (Leave) அல்லது (Leaf) என்ற வார்த்தைகளின் ஒலியைக் குறிக்கும் வடிவமான இலையும் காணப்படுகிறது. இந்த இரண்டு வடிவங்களின் ஒலியை ஒன்று சேர்த்தால் பிலீவ், அல்லது பிலீப் என்று கிடைக்கிறது. தற்காலத்தில் நாம் குறிக்கும் 'நம்பு' என்ற வினைச் சொல் இதுதான். நான்காவது ஐந்தாவது வடிவங்களைப் பற்றி ஏற்கனவே நாம் தெரிந்து கொண்டிருக்கிறோம். கடைசியாக உள்ளது ஒட்டைச் சிவிங்கியைப் போன்ற ஒரு படம். இது ஒரு ஒட்டைச் சிவிங்கி. ஆதி அடையாள மொழியைச் சேர்ந்தது, எங்கெங்கு வசதியாக இருக்கிறதோ அங்கெல்லாம் இதைத் தொடர்ந்து உபயோகித்தனர்.

'நான் ஒரு ஒட்டைச் சிவிங்கியைப் பார்த்ததாக நம்புகிறேன்' என்ற பொருள்படும் வரி நமக்குக் கிடைக்கிறது.

முதன் முறையாகக் கண்டுபிடிக்கப்பட்ட இந்த முறை, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் செம்மையாக்கப்பட்டு வந்தது. படிப்படியாக மிகவும் முக்கியமான வடிவங்கள், தனி எழுத்துக்கள் அல்லது குறில் எழுத்துக்களான வ்வு (fu), எம் (em) டி, (dee), ஸீ (Zee) இவைகளைக் குறித்தன. தற்காலத்தில் இவை முறையே எப் (f) எம் (m) டி (d) இஸட் (z) என்பனவாகும். எகிப்தியர்கள் பிறருக்குத் தெரியக்கூடாத பொருள்களை இவற்றின் உதவியால் எழுதினர். சிரமம் ஏதுமின்றி, தங்கள் தலைமுறை

அநுபவங்களைத் தங்களுடைய பின் சந்ததிக்குப் பயன்படும் வகையில் காப்பாற்றி வைத்தனர். தன் இளமைப் பருவத்திலேயே இயற்கை யெய்திய சேம்பலின் தன் அறிய ஆராய்ச்சியால் நமக்குக் கற்றுக் கொடுத்தது இதுதான். இன்று ஏனைய பழம் நாடுகளைக் காட்டிலும் எகிப்தைப் பற்றி நாம் அதிகம் தெரிந்து கொண்டிருப்பதற்கு இதுவும் ஒரு காரணம்.

# மாநிலம்

## வாழும் மக்கள், இறந்த மக்கள்

பசியோடு உணவிற்காகத் தேடியலைந்த பிராணியின் கதைதான் மனித இனத்தின் வரலாறு. எங்கெங்கு உணவு அதிகமாகவும், எளிதில் பெறமுடிந்ததாயும் இருந்ததோ, அங்கெல்லாம் தன் வீட்டைக் கட்டிக்கொள்ள மனிதன் சென்றான். நைல் நதிப் பள்ளத்தாக்கின் புகழ் வெகு காலத்திற்கு முன்பே பரவியிருந்திருக்க வேண்டும். தொலைவிலிருந்தெல்லாம் காட்டுமிராண்டிகள் நைல் நதிக் கரையை வந்தடைந்தனர். கடல், பாலைவனம் இவற்றால் சூழப்பட்ட அந்த இடத்தை அடைவது எளிதல்ல. நல்ல ஆரோக்கியமும், தேகக் கட்டும் உள்ள ஆண்களும் பெண்களும் மாத்திரமே உயிருடன் அந்த வளமான இடத்தை வந்தடைந்தனர், அவர்கள் யார் என்பது நமக்குத் தெரியாது. சிலர் ஆப்பிரிக்காவின் உள் நாட்டிலிருந்து வந்தனர். அவர்கள் சடை முடியுடனும், தடித்த உதடுகளுடனும் இருந்தனர். மற்றவர்கள் அரேபியப் பாலைவனத்திலிருந்தும், மேற்கு ஆசியாவின் அகண்ட நதிதீரத்தினின்றும் வந்தனர். அவர்கள் மஞ்சள் நிறத்தவராயிருந்தனர். இந்த அதிசய நிலத்தின் உடமைக்காக அவர்கள் போரிட்டனர். தங்கள் எதிரிகள் அழித்த கிராமங்களைக் கட்டினர். அந்த அழிவினின்றும் கிடைத்த பொருள்களைக்

கொண்டும் மீண்டு மீண்டும் கிராமங்களை உண்டாக்கினர்; அவைகளும் பதிலுக்குப் பதில் பிறரால் அழிக்கப்பட்டன.

படிப்படியாக ஒரு புதிய இனம் உருவாயிற்று. 'அந்த மனிதன்' என்ற பொருள் தரும், 'ரெமி' (Remi) என்று தங்களைக் கூறிக்கொண்டனர். இப் பெயரால் அவர்கள் பெருமை கொண்டனர். 'இறைவன் நாடு' என்று நாம் அமெரிக்காவை அழைப்பதைப்போல் அவர்கள் அழைத்துக்கொண்டனர்.

ஆண்டின் ஒரு பகுதியில், அதாவது நைல் நதியில் வெள்ளம் வரும் காலத்தில் சிறு தீவுகளில் வசித்துவந்தனர். இந்தத் தீவுகள் ஒரு நாட்டிற்குள்ளேயே, நாட்டிற்கும் இவற்றிற்கும் தொடர்பு இல்லாத முறையில் கடலாலும், பாலைவனத்தாலும் பிரிக்கப்பட்டிருந்தன. இதனாலேயே இவர்கள் பிறருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பின்றி, அன்னியருடன் அதிகம் தொடர்புகொள்ள விரும்பாத நாட்டுப்புறத்தாரின் குணத்தைக் கொண்டிருந்தனர். தங்கள் பழக்க வழக்கங்கள் மேலானது என்று எண்ணினர். அதே போலவே, மற்றக் கடவுள்களைக் காட்டிலும் தங்கள் கடவுள் அதிக சக்தி வாய்ந்தது என்றும் நம்பினர். அந்நியர்களை வெறுக்கவில்லை; ஆனல் அவர்களைக் கண்டு இரக்கப்பட்டனர். எகிப்தின் எல்லைக்கு அப்பாலேயே வைத்திருக்க விரும்பினர். இல்லாவிட்டால் தங்கள் மக்கள் அந்நியக் கோட்பாடுகளுக்கு இரையாகிவிடுவர் எனப் பயந்தனர்.

அவர்கள அன்பு உள்ளம் கொண்டவர்களாயிருந்தனர். கொடுமையான செயல்கள் எதுவும் செய்யவில்லை. அவர்கள் மிகவும் பொறுமை யோடிருந்தனர். வாணிகத்தில் கவலையற்ற போக்கினராய் வாழ்ந்தனர். தங்கள் வாழ்விற்காகத் தொடர்ந்து போராடிக்கொண்

டிருந்த வடக்கத்திய மக்களைப் போலக் கஞ்சர்களாகவும்; அற்ப குணம் படைத்தவர்களாவும் இல்லை. அதிகச் சிரமமின்றி வாழ்வை நடத்தினர்.

தொலைதூரத்திலுள்ள பாலைவனத்திற்கு அப்பால் இரத்தம்போற் சிவந்த அடிவானத்திற் சூரியன் உதயமாகும்பொழுது தங்கள் நிலங்களை உழுவதற்காக அவர்கள் சென்றனர். சூரியனின் கடைசிக்கதிர் மலைமுகட்டிற்கு அப்பால் மறைந்ததும் அவர்கள் உறங்கச் சென்றனர். மிகவும் கஷ்டப்பட்டு உழைத்தனர். எல்லையற்ற பொறுமை, மனத்திண்மை இவற்றுடன் எத்தனையோ தொல்லைகளையும் சகித்துக் கொண்டனர். சாவிற்குப் பின் வரஇருக்கும் புதிய உலகிற்கு, இந்த வாழ்வு ஒரு குறுகிய முதற்படி என்றே அவர்கள் நம்பினார்கள். இன்றைய வாழ்வைக் காட்டிலும் எதிர்கால வாழ்வு மிக முக்கியமானது என்ற எண்ணம் வளரும்வரை, எகிப்திய மக்கள் தங்கள் வளமான நிலத்தை இறந்தவர்களைத் தொழும் நிலமாக்கினர். எகிப்தியர் வணங்கிய கடவுள்கள், இறந்தபின் அடையும் அளவிலா மகிழ்ச்சி, சுகம் இவைகள் பற்றிய அவர்களின் அசைக்க முடியா நம்பிக்கை, இவைபற்றியும் மற்றும் மதசம்பந்தமான அநேக கதைகளையும் துலக்கமாகக் கூறுகின்றன. பழம்பள்ளத்தாக்கில் கண்டெடுக்கப்பட்ட புராதன பாப்பைரஸ் ஏடுகள் "முதன் முதலில் ஒவ்வொரு கிராமமும் தங்களுக்கெனத் தனியாக ஒரு கடவுளைக் கொண்டிருந்தனர்; இந்தக் கடவுள், பெரும்பாலும் விசித்திர வடிவமுள்ள ஒருகல்லிலோ அல்லது ஒரு குறிப்பிட்ட பெரிய மரத்தின் கிளையிலோ குடியிருப்பதாகக் கருதப்பட்டு வந்தது; கடவுளுடன் சிநேகமாக இருப்பது நல்லது; இல்லையெனில், அது பெரும் தொல்லைகள் விளைவிக்கக்கூடும்; பயிரை அழித்து மாடும் மக்களும் இறக்கும்வரை

நீரின்றி வரண்டிருக்கச் செய்யும்; ஆகையால் கிராம மக்கள் அதற்குத் தின்பதற்கு பண்டம், உணவுகள் முதலியவற்றை அன்பளிப்பாகக் கொடுத்தனர்; எகிப்தியர்கள் தங்கள் எதிரிகளுடன் சண்டையிடும் பொழுது கடவுளையும் எடுத்துச் சென்றனர்; ஆபத்துக் காலத்தில் மக்கள் இந்தக் கடவுளைச் சுற்றிச் சூழ்ந்து கொள்வர்;" என்றெல்லாங் கூறுகின்றன.

நாட்டில் நாகரீகம் வளர்ந்து நல்லசாலைகள் அமைத்து எகிப்தியர்கள் பிரயாணம் ஆரம்பித்த பிறகு வழிபாட்டுப் பொருள்களான, கற்களும் கட்டைகளும் முக்கியத்வத்தை இழந்து, படிக்கற்கள் நாற்காலிகளாகவோ அல்லது கவனிப்பாரற்று மூலையிலோ எறியப்பட்டன. பள்ளத்தாக்கு முழுவதிலும் வாழ்ந்த எகிப்திய மக்களின் வாழ்விற்கு ஆக்கம் தந்த இயற்கைச் சக்திகளைக் கொண்ட, அதிக சக்தி வாய்ந்த புதுக் கடவுள்கள் பழைய கடவுள்களின் இடங்களைக் கைப்பற்றிக் கொண்டன. பொருள்களை வளர்க்கும் சூரியன், இவற்றுள் முதன்மையாக இருந்தது; அடுத்தது நைல்நதி. அது பகலில் வெப்பத்தைத் தணித்தது; நிலவளத்தைப் பெருக்க வளமான வண்டலைக் கொண்டு வந்தது. வானவீதியில் இரவு நேரத்தில் தன் சின்னஞ் சிறு படகைச் செலுத்துந் தண்ணொளி பரப்பும் சந்திரன் இடி, மின்னொளி முதலியவைகளும் இருந்தன. தங்களுடைய விருப்பத்திற்கும், மனத்திற்கும் உகந்த முறையில் வாழ்க்கையை இன்பமாயும், துன்பமாயும் ஆக்க எல்லாப் பொருள்களும் இருந்தன. இயற்கையின் சக்திக்குட்பட்ட ஆதி மனிதன், நம்மைப்போலக் கட்டடங்களில் இடிதாங்கி வைத்து இடியைத் தவிர்க்கவோ, அல்லது மழையில்லாத கோடைகாலத்தில் உதவ அணைக்கட்டுகளும் நீர்த்தேக்கங்களும் கட்டியோ வாழ முடியாமலிருந்தான். இதற்கு

மாருக அவனுடைய அன்றாட வாழ்வில் இவைகள் ஒரு முக்கிய பாகமாக இருந்தன. தொட்டிலிலிருந்து சுடுகாடு வரை அவனைத் தொடர்ந்துகொண்டே இருந்தன சக்தி வாய்ந்த மின்னொளியும், நதியின் வெள்ளப் பெருக்கும். உருவமற்ற சக்திகள் என்று அவனால் கற்பனை செய்து இவற்றை பார்க்கக்கூட முடியவில்லை. பொறியியலார் பொறியை இயக்குவதைப் போன்றோ, அல்லது கப்பல் தலைவன் கப்பலைச் செலுத்துவது போலவோ, எங்கேயோ இருந்து ஏதோ ஒன்று—ஆம், அவர்கள் தலைவனாகத்தான் இருக்கவேண்டும்-அவர்களுக்கு வழிகாட்டியது. படைக்கு ஒருதலைவன் இருப்பதைப்போல,கடவுளர்களுக்கு ஒரு தலைவர் உண்டாக்கப்பட்டார். அவருக்கு உதவியாக அநேக அலுவலர்கள் நியமிக்கப்பட்டனர். அவரவர்கள் எல்லைக்குட்பட்ட இடத்தில் சுதந்திரமாகக் காரியங்கள் நடத்தலாம். எல்லா மக்களின் சுகதுக்கங்களைப் பாதிக்கும் முக்கிய விஷயங்களில் தங்கள் யஜமானரிடமிருந்து கட்டளைக்காகக் காத்திருக்க வெண்டும்.

எகிப்தின் சர்வ வல்லமை பொருந்திய கடவுளின் பெயர் ஆசிரிஸ். இந்த ஆண்டவனின் அதிசயமான வாழ்க்கையைப்பற்றி எல்லா எகிப்திய குழந்தைகளுக்கும் தெரியும்.

முன்னொரு காலத்தில் நைல்நதிப் பள்ளத்தாக்கில் ஆசிரிஸ் என்ற மன்னன் வசித்து வந்தான். ஆசிரிஸ் தன் மக்களுக்கு நிலத்தை உழுது பயிரிடக் கற்றுக் கொடுத்தான். தன் நாட்டிற்கு நல்ல சட்டங்களைத் தந்தான். அவன் மிகவும் நல்லவன். ஆனால், அவனுக்கு சேத் என்றபெயருடைய கெட்ட தம்பி ஒருவன் இருந்தான். ஆசிரிஸின் புகழைக் கண்டு பொறாமை கொண்ட சேத், அவனை ஒருநாள விருந்திற்கு அழைத்து

விருந்து முடிந்ததும் முக்கியமான ஒன்றைக்காட்ட விரும்பு வதாகச் சொன்னான். அதிசயப்பட்ட ஆசிரிஸ் என்ன பொருள் என்று கேட்டான். வேடிக்கையான உருவத்தி லுள்ள சவப்பெட்டி, துணியைப் போன்று போட்டுக் கொள்ளலாம் என்றும் சேத் கூறினான். ஆசிரிஸ் அதைப் போட்டுப்பார்க்கச் விரும்பி சவப்பெட்டிக்குள் நுழைந்ததும் சேத் அதன் வாயை நன்றாக மூடிவிட்டான். பிறகு தன் வேலையாட்களை அழைத்துச் சவப்பெட்டியை நைல் நதிக் குள் எறிந்துவிடும்படி கட்டளையிட்டான். இந்தப் பயங்கர மானசெய்தி விரைவில் எல்லா இடத்திலும் பரவியது. தன் கணவனை அதிக அன்புடன் நேசித்த இசிஸ் செய்தி யைக்கேள்வியுற்று நைல் நதிக்கரைக்குச் சென்றாள். அலை கள் சவப் பெட்டியை கரையோரத்தில் கொண்டுசேர்த் தது. அடுத்த நாட்டை ஆண்டுவந்த தன் மகன் ஹோர ஸீக்ரகுச் செய்தியைச் சொல்ல இசிஸ் சென்றாள். அவள் சென்றதும் கொடுமையாளன் சேத் அரண்மனைக்கு உள்ளே புகுந்து ஆசிரிஸின் சடலத்தைப் பதினான்கு கூறு களாக்கினான். திரும்பிவந்த இசிஸ் சேத்தின் கொடுஞ் செயலைக் கண்டாள். பதினான்கு கூறுகளையும் ஒன்று சேர்த்து ஒட்டினான். ஆசிரிஸ் பிழைத்தெழுந்தான். இறந்த மக்களின் ஆவி செல்லும் கீழ் உலகத்தை ஆசிரிஸ் ஆண்டு வந்தான். கொடுமையாளன் சேத் தப்பியோட முயன்றான். தன் தாயால் எச்சரிக்கப்பட்டிருந்த ஆசிரி ஸின் மகனாக ஹோரஸ் சேத்தைக் கொன்றான்.

உண்மை மனைவி, கொடுமையாளனான தம்பி; தந்தை யைக் கொன்றவனைப் பழிவாங்கிய கடமையாளனான மகன்; அக்ரமம் அழிந்து நீதி நிலைத்தது; இந்தக் கதைதான் எகிப்து மக்களின் மத வாழ்க்கையின் அடிப்படையாக இருந்தது.

இலையுதிர் காலத்தில் இறந்து, இளவேனிற் காலத்தில் துளிர்க்கும் எல்லாப் பொருள்களுக்குங் கடவுளாக ஆசிரிஸ் கருதப்பட்டான். கொடுமையாகவும், அநீதியாகவும் நடந்து, எளியவர்களை வதைத்து வாழும் மக்களின் நடத்தைக்குக் கடைசி நீதிபதி, கீழ் உலக அரசனான ஆசிரிஸே. இந்த உலகம் நைல் நதியின் பிறப்பிடமான உயர்ந்த மேற்கு மலைகளுக்கு அப்பால் இருக்கிறது. இக்காரணம் பற்றியே இறந்த ஒருவனைப் பற்றி எகிப்தியர்கள் குறிப்பிடும்பொழுது "அவன் மேற்கே சென்றுவிட்டான்" என்று கூறினர். ஆசிரிஸின் கடமைகளிலும், அவனுக்குக் கிடைக்கும் புகழிலும் இசிஸ் பங்கு எடுத்துக்கொண்டாள். அவர்களின் மகனான ஹோரஸ் சூரியனின் கடவுளாக வணங்கப்பட்டான். ஆகையினாலேயே சூரியன் மறையும் இடத்திற்கு (Horizon) ஹோரைஸன், அல்லது அடிவானம் என்று பெயர். ஹோரஸ், எகிப்திய புதிய அரச பரம்பரையின் முதல் மன்னன். எகிப்திய பரோராக்கள் ஹோரஸ் என்ற பெயரைத் தங்கள் பெயரின் நடுவில் சேர்த்துக் கொண்டனர்.

ஒவ்வொரு சிறு நகரமும், கிராமமும் தங்களுக்கெனத் தனியாக சில தேவதைகளை வணங்கிவந்தன. பொதுவாக எல்லோரும் ஆசிரிஸின் சக்தியில் நம்பிக்கைகொண்டு அதன் தயவைப் பெற முயன்றனர். இது மிகவுங் கடினமான காரியமாதலால், சில விநோதமான பழக்கங்கள் உண்டாயின. முதன் முதலாக இந்த உலகில் வாழாத உடலின் ஆவி ஆசிரிஸின் உலகில் புக முடியாது என்று எகிப்தியர்கள் நம்பினார்கள். என்ன ஏற்பட்ட பொழுதும் இறந்த பிறகு உடலைப் பாதுகாத்து அதற்கெனத் தனியாக, நிலையான ஒரு வீடும் கட்டவேண்டும்; ஆகையால் ஒரு மனிதன் இறந்ததும் அவனுடைய உடல் கெட்டுப் போகாமல் நன்றாகப் பாதுகாக்கப்பட்டது. இது மிகவும்

சிக்கலானதும், கடினமானதுமான வேலை. மதகுருவும் மருத்துவருமான ஒரே மனிதர்தான் இந்த வேலையைச் செய்வார். அவருக்கு உதவியாகக் கீழ்மகனுகக் கருதப் பட்டவரில் ஒருவன் இருந்தான். உடலில் மார்புக்கு அருகே கிழித்து அதனுள் சீடார், மைர், காஸியா போன்ற வாசனைப் பொருள்களைச் செலுத்துவர். மனித உடலில் இம்மாதிரியான அறுப்பு வேலைகளைச் செய்வதை எகிப்தியர்கள் வெறுத்தனர்; ஆதலால், இழிகுலத்தவரையே இந்தச் செயல் செய்ய அமர்த்திக் கொண்டனர்.

இதற்கெனவே லிபியா நாட்டுப் பாலைவனத்திலிருந்து தருவிக்கப்பட்ட உப்புக் கரைசலில் இறந்த உடலைப் பத்து வாரங்கள் வரையில் மதகுரு ஊரவைப்பார். இது ஒரு பொம்மை மாதிரி ஆகிவிடும். தனியாகத் தயாரிக்கப்பட்ட பட்டு நூலினல் சுற்றப்பட்டு அழகாக அலங்கரிக்கப்பட்ட மரச்சவப்பெட்டியில் வைக்கப்பட்டுக் கடைசியாக மேற்குப் பாலைவனத்தில் உள்ள அதன் வீட்டிற்கு எடுத்துச் செல்லத் தயாராகும்.

பாலைவனத்தில் உள்ள ஒரு சிறு கல்லறையோ, அல்லது மலைப்பக்கத்திலுள்ள சிறு குகையோதான் இடுகாடு. அறையின் மத்தியில் சவப்பெட்டியை வைத்து அத்துடன் சமையற் பாத்திரங்கள், சாமான்கள், களிமண் அல்லது மரத்தாலான உருவங்கள் முதலியவைகளையும் வைப்பார்கள். இந்த உருவங்கள்தான் இறந்த எஜமானனுக்குத் தேவையான நேரத்தில் உதவும் வேலையாட்கள். எல்லையில்லாத காலம்வரை இந்த வீட்டில் வசிக்க வேண்டியிருப்பதால் நேரத்தைப் போக்க இசைக் கருவிகளான புல்லாங்குழல், பிடில் முதலியவைகளும் அங்கே இருந்தன. பிறகு, கூரை முதலியவற்றை மண்ணுல் மூடி விடுவர். இறந்த எகிப்தியன் அமைதியாக ஆழ்ந்த தூக்கத்தில் என்றென்றும் இருப்பான்; ஆனல், பாலை

வனத்திலுள்ள காட்டு மிருகங்களான ஓநாயும் பிறவும், மரத்தாலான காரையையும் மண்ணையும் தோண்டி உள்ளே இருக்கும் பொம்மை மனிதனைத் தின்றுவிடும்.

இது மிகவும் பயங்கரமாகக் கருதப்பட்டது. ஏன் எனில் வீடில்லாத மனிதனைப்போல, அவன் ஆவி எப் பொழுதும் அலைந்து திரிந்து அல்லற்பட நேரிடும் என நம்பினர். சவப் பெட்டிக்குத் தக்க பாதுகாப்பளிக்கச் சவக் குழியைச் சுற்றிச் செங்கல்லால் சிறு சுவர் எழுப்பி இடை வெளியைக் கல்லாலும், மண்ணாலும் மூடிவைத்தனர். இம் மாதிரி ஒரு செயற்கைக் குன்றின் மூலம் நரி, ஓநாய், திரு டர்கள் முதலியவைகளினின்றும் பொம்மை மனிதனைப் பாதுகாத்தனர்.

ஒருநாள், எகிப்தியன் தான் அளவுக்கு மீறி அன்பு செலுத்திய தன் தாயைப் பறிகொடுத்தான். நைல்நதி தீரத்தில் கட்டப்பட்ட மற்றக் கட்டடங்களைக் காட்டிலும் அழகான கட்டடம் ஒன்றைப் புதையுண்ட தன் தாயின் கல்லறைமேல் கட்டுவிக்கத் தீர்மானித்தான், தொலை தூரத்திற்கு அப்பாலிருந்து பார்த்தாலும் தெரியும்படி ஒரு பெரிய குன்றை நிர்மாணிக்கும்படி தன் வேலையாட் களை ஏவினான். காற்றினால் குன்றின் மண் சரிந்து விழா திருக்க குன்றுகளின் பக்கங்களில் செங்கல்லை வைத்துப் பூசினான்.

புதிய இந்த வேலைப்பாட்டை மக்கள் விரும்பினர். காடுவரை அனைவரும் காணும் விதத்தில் தரைமட்டத்தி லிருந்து கல்லறை இருபது, முப்பது, நாற்பது அடி உய ரம் வரை எழுந்தது. கடைசியாகப் பணம் படைத்த பெரிய மனிதன் ஒருவன் முற்றிலும் கல்லாலான கல் லறை ஒன்றை எழுப்பினான். இறந்த மனிதனை வைக்கப் பட்டிருக்கும் சவக்குழியின்மேல் செங்கல்லால் நூற்றுக் கணக்கான அடி உயரத்தில் கல்லறை கட்டுவித்தான்.

இதில் சிறிதான ஒருவழி உண்டாக்கினன். இந்த வழியைக் கடப்பைக் கல்லால் மூடிய பிறகு எவ்விதத் தொந்தரவுமின்றிப் பிரேதம் பத்திரமாக இருக்க முடிந்தது. இம்மாதிரிக் கட்டிடத்தில் அரசனை மிஞ்சுமாறு யாரும் கட்டுவதற்கு அரசன் அநுமதித்திருக்கமாட்டான். எகிப்தியர்களுள் மிகவும் சக்திவாய்ந்தவனும் பெரிய அரண்மனையில் வாழ்ந்தவனுமான அவனுக்கு மிகவும் அழகான கல்லறையும் பொருத்தமானதே! மற்றவர்கள் மண்ணால் கட்டுவதை மன்னன் பொன்னால் கட்டும் வாய்ப்பும், வசதியும் இருந்தது.

பாமரா எல்லா இடத்திற்கும் ஆட்களை அனுப்பித் தொழில் வல்லுநர்களை தருவித்தான்; சாலைகள் அமைத்தான். வேலையாட்கள் வசிப்பதற்குத் தக்க வீட்டுவசதிகள் செய்து கொடுத்தான். (அந்த வீடுகளை இப்பொழுதும் பார்க்கலாம்.) அதன் பிறகு எக்காலத்திலும் நிலைத்திருக்குமாறு தனக்கு ஒரு கல்லறையைப் பிறர் கண்டு வியக்கும் முறையில் கட்டினன்.

நல்ல வேலைப்பாடமைந்த இந்தக் கட்டடத்தைத்தான் நாம் 'பிரமிட்' என்று அழைக்கின்ருேம்.

'பிரமிட்'கள் தோன்றி ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகுதான் கிரேக்கர்கள் எகிப்துக்கு வந்தனர்; நம் நாட்டின் அதிசயப் பொருள்களைக் காண நாம் அந்நியர்களை அழைத்துச் செல்வதுபோலவே எகிப்தியர்களும், கிரேக்கர்களை அழைத்துச் சென்று பிரமிட்களைக் காட்டினர்கள். கிரேக்க விருந்தினர் அதைப் பார்த்து அதிசயித்து விநோதமான குன்றுகள் என்னவாயிருக்கக்கூடும் என்று கையசைத்து வினவினர். கையசைவிலிருந்து அவர்கள் அதன் உயரத்தைத்தான் குறிக்கிருர்கள் என எண்ணிய எகிப்தியவழிகாட்டி, "ஆமாம், அது அதிக உயரம்தான்'' என்ருன்.

'உயரம்' என்பதைக் குறிக்கும் எகிப்துச் சொல் 'பிரமஸ்'.

'பிரமஸ்' என்பதுதான் அந்தக் கட்டடத்தின் முழுப் பெயர் போலும் என்று எண்ணிய கிரேக்கர்கள் அதைப் 'பிரமிஸ்' என்றழைத்தனர்.

'பிரமிஸ்' என்பதைப் 'பிரமிட்' என்று மாற்றிவிட்டோம் நாம். இன்றைக்குங்கூட நைல் நதிக் கரையில் இருக்கும் கல்லறைகளை நாம் அதே எகிப்துச் சொல்லாலேயே அழைக்கிறோம்.

இந்தப் பிரமிடுகளில் பெரியதும், ஐந்நூறு அடி உயரமுள்ளதுமான பிரமிட், ஐம்பது நூற்றாண்டுகளுக்கு முன் கட்டப்பட்டதாகும். இதன் அடிப்பாகம் எழுநூற்றைம்பத்தைந்து அடி அகலம் உடையது. கிறித்து மார்க்கத்தைச் சேர்ந்தவற்றுள் பெரிதாகக் கருதப்படும் செயின்ட் பீட்டர் ஆலயத்தைப் போல் மூன்று மடங்கு பெரிது. இது பதின்மூன்று ஏக்கர் நிலப்பரப்புவரை விரிந்திருக்கிறது.

இருபது ஆண்டுகளாக ஆயிரக் கணக்கான மக்கள் தொலைவிலுள்ள சினய் தீபகற்பத்திலிருந்து நைல்நதியைக் கடந்து (எப்படிக் கடந்தார்கள் என்று நமக்குத் தெரியவில்லை!) கற்களைக் கொண்டுவந்து பாலைவனத்தில் பாதிதூரம் சென்று கடைசியாகச் சரியான முறையில் கட்டடங்களைக் கட்டியிருக்கின்றனர். பிரமிடுக்கு நடுவிலிருக்கும் அரசரின் சமாதிக்குச் செல்லும் குறுகிய வழியை, ஆயிரக் கணக்கான டன் எடையுள்ள கற்கள் நாற்புறமும் இருந்து அமுக்கியும், சிதைந்து போகாதபடி அவ்வளவு திறமையாக அக்காலப் பொறியியலாரும், கலைவல்லுநரும் அதை நிர்மாணித்திருக்கின்றனர்.

# நாட்டின் தோற்றம்

தற்காலத்தில் நாம் எல்லாம் ஒரு நாட்டின் உறுப்பினர்கள். பிரெஞ்சுக்காரராகவோ, சைனுக்காரராகவோ அல்லது ரஷ்யர்களாகவோ இருக்கலாம். இந்தோனேசியாவின் ஒரு மூலையிற் கூட வசிக்கலாம். அது எங்கிருக்கிறது என்று உனக்குத் தெரியுமா? எங்கிருந்த போதிலும் நம் 'நாடு' என்று கூறப்படும் மக்கள் தொகுப்பால் நாம் அனைவரும் ஒருவராக இருக்கிறோம்.

ஒரு மன்னனையோ அல்லது ஒரு மக்கள் தலைவனையோ அது ஆட்சியாளராகக் கொண்டிருக்கலாம்; அது பற்றி அக்கறையில்லை. இந்த நாடு எனும் பெரும் பொருளின் அணுவாக நாம் பிறக்கிறோம், இறக்கிறோம்; இந்த முறையினின்று ஒருவருமே தப்ப முடியாது.

உண்மையைக் கூறின், 'நாடு' என்பது புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஒன்று. உலகின் ஆதிவாசிகளுக்கு 'நாடு' என்றால் என்ன என்று தெரியாது. ஒவ்வொரு குடும்பமும் தங்களுக்காக வேட்டையாடி, வேலை செய்து, வாழ்ந்தனர்—மறைந்தனர். சில சமயங்களில், காட்டு மிருகங்களினின்றும், அந்நிய மக்களினின்றும் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள இந்தக் குடும்பங்களில் சில, ஒன்று சேர்ந்து வாழ்ந்தன. இது 'ஒரு இனம்' அல்லது கூட்டம் என்று அழைக்கப்பட்டது. அபாயம் அகன்றதும்

இந்தக்கூட்டம் சிதைந்து வாழும். ஓநாய், காடி முதலிய வைகளின்றும், தன்னைக் காப்பாற்றிக்கொள்ள முடியாத பலமற்றவர்கள் கொல்லப்படுவதைப் பற்றிப் பிறர் கவலைப்படுவதில்லை. சுருங்கக்கூறின், ஒவ்வொருவரும் தன்னளவில் தனி நாடாகவே வாழ்ந்தனர். அண்டை, அயலாரின் பாதுகாப்பு, சுக துக்கங்கள் இவைகளைப்பற்றிக் கவலைகொள்ளவில்லை. மிகமிக மெதுவாக இந்தத் தனி நிலை மாறி, ஒரு ஒழுங்கான அரசாங்கம் முதன் முதலாக எகிப்தில் ஏற்பட்டது. இத்தகைய நல்லதோர் வளர்ச்சிக்கு ஆக்கம் தந்தது நைல் நதியே. ஒவ்வொரு ஆண்டிலும் கோடைக்காலத்தில், எப்படி நைல் நதியும் அதன் வளமான பகுதியும் பரந்த உள்நாட்டுக் கடலாக இருக்கும் என்பதைப் பற்றி, முன்னர் கூறினேன். இந்த வெள்ளத்தினின்றும் தங்களைக் காத்துக்கொள்ளவும், தண்ணீரைப் பயன்படுத்தவும், சிற்சில இடங்களில் அணைகள் கட்டவும், ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் மனிதனும், மிருகங்களும் தங்குவதற்கு சிறு தீபகற்பங்கள் கட்டவும்வேண்டியதிருந்தது. இந்தச் செயற்கைத் தீபகற்பங்களைக் கட்டுவது அவ்வளவு எளிதானதல்ல. ஒரு தனி மனிதன், ஒரு குடும்பம், தனி இனம் இவர்களால் மற்றவர்களுடைய உதவியின்றி ஆற்றில் அணைகட்ட முடியாது. ஒரு குடியானவன் தன் அயலானை எவ்வளவு வெறுத்தபோதிலும், தான் தண்ணீரில் மூழ்குவதை விரும்பமாட்டான். ஆற்றின் நீர் பெருகி மனைவி, மக்கள், மாடுகள் முதலியவை அழிவதினின்றும் காப்பாற்றத், தான் வெறுக்கும் அயலானையும், எல்லா கிராமத்தவர்களையுமே உதவிக்காக அவன் அழைக்கின்றான்.

தங்களுக்கிடையே ஏற்பட்ட சிறு பூசல்களை மறந்து, தேவையான நேரத்தில் மக்கள் ஒன்று சேர்ந்தனர். நைல் நதிப் பள்ளத்தாக்கு முழுதும் மக்கள் கூட்டம் கூட்ட

மாகச் சேர்ந்து பொதுக்காரியத்திற்காக ஓயாது உழைத்தனர். வாழவும், அவ்வாழ்வு வளமாவதற்கும் ஒருவரையொருவர் நம்பியிருந்தனர்.

சிறிதாக ஆரம்பித்த இந்தக் கூட்டுவாழ்வுவளர்ந்து அதிலிருந்து முதன் முதலாகச் சக்திவாய்ந்த நாடு ஒன்று உருவாகியது.

முன்னேற்றப்பாதையின் ஏறுநடைப் பீடுடைய செயலாகும் இது. இதனால், எகிப்து நல்லதோர் வாழுமிடமானது. இது சட்டவிரோதமான கொலை முதலியவற்றிற்கும் ஒரு முடிவு தேடியது. இதற்கு முன்பு இருந்ததைக் காட்டிலும், மக்களுக்கு நல்ல பாதுகாப்பளித்துப் பலமற்றவர்களும் பயமின்றி வாழும் வழியை உண்டாக்கியது. தற்காலத்தில் ஆப்பிரிக்காவின் அடர்ந்த காடுகள் தான் ஒழுங்கற்ற நிலையில் இருக்கிறது. சட்டமில்லாத நாடு, ஊர்க்காவலன், நீதிபதி, சுகாதார அதிகாரிகள், நோய் நீக்கும் விடுதி, பள்ளிகள் முதலியவை இல்லாத ஓர் உலகத்தைக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை.

ஆனால், ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன், எகிப்து மாத்திரம்தான் சட்டத்திற்குட்பட்ட ஒழுங்கான ஒரு நாடாக இருந்தது. வாழ்க்கைப் போராட்டங்களில் தன்னந்தனியாகப் போராடும் அண்டை அயலார்கள் எகிப்தைப் பார்த்துப் பொறாமைப்பட்டனர்.

ஒரு நாடு, குடிமக்களை மாத்திரம் கொண்டதாக இல்லை சட்டத்தை நிலைநாட்டுவதற்கும், ஆபத்துக் காலத்தில் மக்களுக்குத் தலைமை தாங்கவும் ஒரு சிலர் தேவைப்பட்டனர். ஆகையால் எந்த ஒரு நாடும் மன்னன், மன்னர் மன்னன், ஷா (பெர்சியாவில் அழைப்பது போல, அல்லது நம் நாட்டில் அழைப்பதுபோல் மக்கள்

தலைவர் என்ற பெயர்களில் ஒரு தலைவரின்றி இருந்ததில்லை.

பண்டைக் காலத்தில் ஒவ்வொரு எகிப்தியக் கிராமத்திலும், வயதானவர்களும் இளைஞர்களைக் காட்டிலும் அனுபவமுள்ளவர்களுமான கிராமத்துப் பெரியவர்களின் வார்த்தையை அனைவரும் மதித்து நடந்தனர். இந்தப் பெரியவர்கள் மிகவும் பலசாலியான ஒரு வீரனைத் தங்கள் படைக்குத் தலைவனாக சண்டைக் காலத்தில் தேர்ந்தெடுத்தனர். அந்தத் தலைவனே வெள்ளச் சேதம் ஏற்படும்பொழுது என்ன செய்வதென்பதையும் அவர்களுக்குச் சொன்னான். மற்றவர்களிடமிருந்து அவனைப் பிரித்துக்காட்ட அவனுக்கு ஒரு பட்டம் கொடுத்தனர். அரசன், அல்லது இளவரசன் என்ற பெயரில் அழைத்துத் தங்கள் பொது நலனுக்காக அவன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தனர்.

எகிப்திய வரலாற்றின் ஆரம்ப காலத்தில் மக்களிடையே கீழ்க்கண்ட பிரிவுகளை நாம் காண்கிறோம்.

பெரும்பாலான மக்கள் குடியானவர்கள்; பொருளாதாரத்துறையிலும் அவர்கள் எல்லோரும் சமமே. அவர்களை ஆளுபவன் மிகவும் சக்திவாய்ந்தவன்; படைத் தலைவனும் அவனே. நீதிபதிகளை நியமிப்பவனும், பொதுமக்களின் வசதிக்காகச் சாலைகள் அமைப்பவனும் அவன்தான் பாதுகாப்புப் படைக்குத் தலைமை தாங்கித் திருடரைப் பிடிப்பதும் அவன்தான். மதிக்கவொண்ணாத இந்த வேலைகளுக்குப் பதிலாக, எல்லா மக்களும் செலுத்தும் வரிப் பணத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட தொகையை அவன் பெறுகிறான். அப்படியிருந்தபொழுதிலும் வரிப்பணத்தின் பெரும்பகுதி அரசனுக்கே சொந்தமானதல்ல; பொது நன்மைக்குப் பயன்படுத்தும்படி அவனிடம் நம்பிக்கையுடன் விட்டுவைக்கப்பட்ட பணம்தான்.

சிறிது காலத்திற்குப் பிறகு, அரசனும் குடியானவர்களும் அல்லாத ஒரு புதுப் பிரிவான மக்கள் உருவாயினர். பிரபுக்கள் என்று பொதுவாக அழைக்கப்படும் இந்தப் புதிய வகுப்பினர், ஆளுபவருக்கும் ஆளப்படுபவர்களுக்கும் இடையில் இருந்தனர். ஒவ்வொரு நாட்டின் வரலாற்றிலும், இந்த வகுப்பினர் தோன்றிய அந்த நாட்களிலிருந்து, அந்தந்த நாட்டின் வளர்ச்சியில் பெரும்பங்கு கொண்டிருந்தனர். அன்றாட வாழ்வின் பொதுவான சூழ்நிலையிலிருந்து இந்தப் பிரபுக்கள் எவ்விதம் பெருகினர்; எல்லாவித எதிர்ப்புகளினின்றும் எப்படித் தங்களை இது நாள்வரைக் காத்துக் கொண்டனர், என்பதைப் பற்றி உங்களுக்கு விளக்கமாகச் சொல்ல முயற்சிக்கிறேன்.

என்னுடைய கதையை எளிதாகப் புரியவைப்பதற்காக ஒன்று சொல்லுகிறேன்:

ஐந்து எகிப்தியப் பண்ணைகள் இருந்தன. இதன் பண்டைநாள் முதற்சொந்தக் காரர்கள் எத்தனையோ ஆண்டுகளுக்குமுன் அதற்குள் சென்று விட்டார்கள். குடியிருப்பற்ற காள் நிலத்தில் ஒவ்வொருவரும் பயிர் செய்து, பசுவும் பன்றியும் வளர்த்து, தாங்களும் தங்கள் குழந்தைகளும் வாழ்வதற்கு என்ன என்ன தேவையோ அவற்றைச் செய்தனர். முன் பண்ணையிலிருந்த வாழ்க்கைமுறைதான் இங்கும் இருந்தது.

எந்தவிதச் சட்டத்தையும் மீருமல், அண்டையிலிருப்பவர்களின் இடத்தையும், நிலத்தையும் கைப்பற்றி ஆட்சி செய்ய ஒருவனுல் எப்படி முடிந்தது?

அறுவடை முடிந்த பிறகு, ஒருநாள் ஃபிஸ் என்பவன் தன் தோணியில் தானியங்களை வைத்து, மத்திய எகிப்தில் வாழும் மக்களுக்கு விற்பதற்காக, மெம்பிஸ் என்ற நகருக்கு அனுப்பினன். குடியானவர்களுக்குச் சாதக

மாக அந்த ஆண்டிலே அதிகம் விளைந்தது. ஃபிஸ் தன் கோதுமை விற்பனை மூலம் அதிகப்பணம் பெற்றான். பத்து நாட்களுக்குப் பிறகு தோணி திரும்பியது. தன் முதலாளிக்காகத் தான் பெற்ற பணத்தைத் தோணித் தலைவன் கொடுத்தான். சில வாரங்களுக்குப் பிறகு, ஃபிஸ் பண்ணைக்கு அருகில் உள்ள ஸ்பாரோ, பக்கத்திலிருக்கும் சந்தைக்குத் தன் கோதுமையை அனுப்பினான். சென்ற சில ஆண்டுகளாக ஸ்பாரோ துரதிர்ஷ்டத்தில் உழன்றான். தன் தானியத்தை லாபகரமாக விற்பதின் மூலம், தன் இழப்பை ஈடுசெய்யலாம் என அவன் நம்பினான். ஆகையால், மெம்பிஸ் நகரின் கோதுமை விலை உயரும் வரை காத்திருந்தான்.

கிரீட் தீபகற்பத்தில், பஞ்சம் பரவி வருவதாக ஒரு வதந்தி கிராமத்தை அதிகாலையில் வந்தணைந்தது. இதன் விளைவாக எகிப்திய அங்காடியில் தானியவிலை அதிகமாக ஏறியது. எதிர்பாராத இந்த விலை உயர்வால் லாபம் அடைய எண்ணிப் பூச்சி தன் ஆட்களை விரைவில் அனுப்பினான்.

பூச்சியின் ஆட்கள் தோணியை அவசரத்தில் செலுத்தியதால், அது பாறையில் மோதி முழுகியது. பொருள்களெல்லாம் தோணிக்கடியில் அகப்பட்டுக் கொண்டன. தன் தானியம் முழுதும் இழந்ததோடல்லாமல், இறந்த தோணித் தலைவனின் மனைவிக்கு, அவள் இழப்பிற்கு ஈடாகப் பத்து தங்க நாணயங்கள் வேறு செலுத்த வேண்டியிருந்தது. பூச்சிக்கு ஏற்கனவே இழப்பு அதிகம்; அதைத் தொடர்ந்து வந்த இந்த நஷ்டத்தையும் அவனால் ஈடுசெய்ய முடியவில்லை.

குளிர்காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. குழந்தைகளுக்குத் துணிகள் வாங்கப் பணம் இல்லை. பழைய மண்

வெட்டியும், பிறவும் புதுப்பிக்காமல் துருப்பிடித்துக் காணப்பட்டன. வயலில் விதைப்பதற்கு விதை கிடையாது. மிகவும் பரிதாபகரமான நிலையில் இருந்தான். அயலான் மீனனைக் கண்டால் பூச்சிக்குப் பிடிக்காது. ஆனால், வேறு வழியில்லை. அவனை அணுகிச் சிறிது பணம் கடன் கேட்கவேண்டும்; மீனனைக் கண்டான். தான் எது வேண்டுமானாலும் தருவதாகவும், ஈடாகப் பூச்சி ஏதாவது பொருள்தர வேண்டுமென்றும் கேட்டான். பூச்சி 'சரி' என்னு சம்மதித்தான். தன் பண்ணையையே மீனனுக்கு ஈடாக வைத்தான்.

மீனனுக்குப் பூச்சியின் பண்ணையைப்பற்றி எல்லாம் தெரியும். எத்தனையோ தலைமுறையாக அந்தப் பண்ணை பூச்சியின் குடும்பத்தினருக்குச் சொந்தமாக இருந்தது. போனீசிய வர்த்தகன் ஒருவன் முரட்டு எருதுகள் இரண்டை ஏமாற்றி விற்றுவிட்டான். நல்ல இனத்தைச் சேர்ந்தது என்றும், சிறிது உணவு உட்கொண்டு, சாதாரண எகிப்திய எருதைக் காட்டிலும் இரண்டு மடங்கு வேலை செய்யும் என்றும் கூறினான். அந்தப் பாசாங்குக்காரனின் பசப்பு மொழியைக் கிழக் குடியானவன் நம்பினான். அண்டை அயலார்கள் அவனைக் கண்டு பெருமைப் படும்படி அந்த அதிசயப் பிராணிகளை வாங்கினான்.

வர்த்தகன் சொன்னபடி நன்றாக எருதுகள் உழைக்கவில்லை. அளவுக்குமீறிய சோம்பேறிகளாகவும் மிகவும் மெதுவாகக் கூட வேலை செய்யாமலுமிருந்தன. இனம் தெரியாத வியாதியால் பீடிக்கப்பட்டு மூன்று வாரங்களுக்குள் அவை இறந்தன.

இந்த அதிர்ச்சியால் தாக்குண்ட கிழக் குடியானவன் பண்ணைவேலையைத் தன் மகனிடம் ஒப்படைத்தான். மகன் பாடுபட்டு உழைத்தான்; ஆனாலும், பயனில்லை. அத்துடன்

அவன் கடைசி நம்பிக்கையான இந்தத் தானியங்களும், தோணியும்வேறு கடலில் மூழ்கிப் போய் பட்டினி—அயலானிடம் கடன் கேட்டல், இதைத் தவிர வேறு வழியில்லை பூச்சிக்கு. மீனனுக்கு அக்கம் பக்கத்திலுள்ளவர்களைப் பற்றி நன்ருகத் தெரியும். பூச்சியின் குடும்ப விபரம் எல்லாம் நன்ருகத் தெரியுமாதலால், மீனன் சில நிபந்தனைகள் விதித்தான். மீனனுக்குப் பூச்சியின் நிலத்தில் எப்பொழுதும் பங்கு உண்டென்றும், பூச்சி ஆண்டில் ஆறு வாரம் மீனனுக்காக உழைக்க வேண்டும் என்றும், அதன்படி செய்தால் பூச்சிக்கு வேன்டிய பணம் எல்லாம் தான் தருவதாகவும் சொன்ஞன்.

பூச்சிக்கு இந்த நிபந்தனைகள் பிடிக்கவில்லை. ஆனுல், குளிர்காலம் விரைந்து வந்துகொண்டிருந்தது. உணவின்றிக் குடும்பத்தினர் வாடிக்கொண்டிருந்தனர். வேறு வழியின்றிப் பூச்சி மீனன் நிபந்தனைகளை ஒப்புக்கொண்டான். அவன் மகன், மகள், அவன் எல்லோரும் இதற்கு முன் இருந்தது போலச் சுதந்திரமாக இருக்கமுடியவில்லை. அவர்கள் அயலாரின் அடிமையாகவோ, அல்லது வேலைக்காரராகவோ ஆகிவிடவில்லை. ஆனுல், தங்கள் வாழ்விற்கு அவன் அன்பை எதிர் நோக்கியிருக்க வேண்டியிருந்தது. மீனனை எங்காவது பாதையிற் கண்டால் சற்று விலகி "வணக்கம் ஐயா". என்றனர். மீனன் எப்பொழுதாவது பதிலளிப்பதுண்டு. இதற்கு முன் இருந்ததைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகமாகத் தண்ணீர் வசதியிருந்தது. அதிகமான நிலம், ஏராளமான ஆட்கள் இவற்றைக் கொண்டு மீனன் முந்திய ஆண்டுகளைக் காட்டிலும் அதிகமான விளைச்சல் உண்டாக்கிஞன். அடுத்த கிராமத்தார்கள் மீனன் புதிதாகக் கட்டிக்கொண்டிருந்த வீட்டைப் பற்றியும், மெதுவாகப் பெருகிவரும் அவன் மதிப்பையும், பணத்தையும் பற்றிப் பேசிக்கொண்டார்கள்.

இதற்குமுன் கேள்விப்படாத ஒரு நிகழ்ச்சி கோடைக் கடைசியில் நடந்தது.

நல்ல மழை பெய்தது.

வயதானவர்களுக்குக் கூட இந்த மாதிரி மழை பெய்த தாக ஞாபகம் இல்லை. இரண்டு நாட்கள் முழுவதும் மழை நன்றாகப் பெய்தது. இருக்கும் இடம் தெரியாமல் எல்லோ ரும் மறந்திருந்த சிறு சிறு வாய்க்கால்கள் பெருகிக் காட் டாறு என ஓடியது. பயங்கர ஒலியுடன் மலையுச்சியிலிருந்து நடு இரவில் ஓடிவந்த காட்டாறு, மலையடிவாரத்தில் பாறைப் பிரதேசத்தில் இருந்த குடியானவரின் அறு வடைகளை எல்லாம் நாசம் செய்தது. அவன் பெயர் கோப் பன். அவனும் அவனுக்கு முன் வாழ்ந்து மறைந்த கோப் பர்களிடமிருந்து அந்த நிலத்தைப் பெற்றான். ஈடு செய்ய முடியாதபடி நஷ்டமாக இருந்தது. கோப்பனுக்குப் புதிய விதைநெல் உடனடியாகத் தேவைப்பட்டது. பூச்சியின் கதையைக் கேள்விப்பட்டிருக்கிறான். மிகவும் கண்டிப் பான பேர்வழியான மீனனைக் கண்டு கேட்பதற்குக் கோப்ப னுக்கு விருப்பமில்லை. கடைசியில் மீனனிடமே சென்று சிறிது கோதுமை கடன் கொடுக்கும்படி வேண்டினான். மீனன் பண்ணையில் ஆண்டுக்கு இரண்டு மாதங்கள் உழைப்பதாகக் கூறிக் கோதுமையைப் பெற்றான்.

மீனனின் புதுவீடு கட்டி முடிந்துவிட்டது. வீட்டிற்கு அதிபனாக அவன் செழிப்புடன் வாழ்ந்தான் வீட்டிற்கு எதிரில் இருந்த குடியானவனுக்கு ஒரு மகள் இருந்தாள்; அவள் பெயர் கத்தி. சிரமத்தோடு வாழ்க்கை நடத்தும் அவனால் தன் மகளுக்கு அதிகம் சீர் செய்ய முடியவில்லை. பணத்தைப் பற்றித் தனக்குக் கவலையில்லை என்பதை மீனன் கத்திக்குத் தெரிவித்தான். அவன் பணக்காரன்; பணமின்றி அவளை மணக்கச் சம்மதித்தான். ஆனால்,

கத்தி இறந்த பிறகு தன் நிலத்தை மருமகனுக்கு விட்டு விடவேண்டும் என்ருன்; கத்தியும் சம்மதித்தான். திருமணம் நடந்தது. மீனன் ஏறத்தாழ நான்கு பண்ணையின் பெரும் பகுதிக்கு உரிமையாளனுக ஆகிவிட்டான்.

மற்றப் பண்ணைகளுக்கு நடுவில் ஐந்தாவதாக ஒரு பண்ணை இருந்தது. அந்தப் பண்ணைச் சொந்தக்காரனை அரிவாள்வாணிகத்திற்குக்கோதுமையைக் கொண்டுசெல்லும்போது, மீனனின் அதிகாரத்திற்குட்பட்ட இடத்தைக் கடந்து போகவேண்டியிருந்தது. மேலும் அரிவாள் பாடுபட்டு உழைக்காமல், மீனனுக்குக் குத்தகைக்கு விட்டுவிட்டான். மீனன் அவனுக்கும் அவன் மனைவிக்கும் வீடு, உணவு, உடை முதலியன கொடுத்தான். அவர்களுக்குக் குழந்தைகள் கிடையாது. இந்த ஏற்பாடு அவர்கள் கடைசிக் காலத்தில் நிம்மதியாக இருக்க வழி செய்தது. அரிவாள் இறந்ததும், தூரத்து உறவான மருமகன் அவன் பண்ணைக்குச் சொந்தங் கொண்டாடினன். மீனன் அவனைத் திரும்பிவர முடியாதபடி விரட்டிவிட்டான்.

இந்த கொடுக்கல் வாங்கல் நடந்துகொண்டு இருக்கும்போதே இருபது ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. கோப்பன் பூச்சி முதலிவர்களின் இளம் சந்ததிகள், வாழ்வில் தங்கள் தங்கள் பங்கைக் கேள்வியின்றி ஒப்புக்கொண்டனர். மீனன் ஒரு 'பெரும்புள்ளி'யாக இருந்தான். மற்றவர்கள் வாழ்வில் முன்னேற விரும்பினுல், மீனனின் நன்மதிப்பினுல்தான் முடியும் என்பதை உணர்ந்தனர். மீனன் இறக்கும்பொழுது தன் மகனுக்கு ஏராளமான நிலபுலங்களையும், அண்டை அயலாரிடம் அதிகாரம் செலுத்தும் நிலைமையையும் விட்டுச் சென்ருன். மீனனின் மகன் அப்பனைப் போலவே இருந்தான். அதிகமான ஆசை, அதை நிறைவேற்றும் சக்தி இரண்டும் இருந்தது அவனிடம்.

எகிப்தின் மேல்பகுதி மன்னன் பெர்பர் என்ற காட்டு மிராண்டிகளுடன் சண்டைக்குச் செல்லும்பொழுது, மீன னின் மகன் வலியச்சென்று மன்னனுக்கு உதவிபுரிந்தான். வீரத்துடன் அவன் போர்புரிந்ததை மெச்சி மூந்நூறு கிராமங்களுக்கு வரிவசூலிக்கும் அதிகாரியாக அவனை நியமித்தான் அரசன்.

சில குடியானவர்களால் வரிசெலுத்த முடியவில்லை. மீனனின் மகன் அவர்களுக் கெல்லாம் சிறு தொகை கட னுகக் கொடுத்தான். பட்ட கடனுக்காகவும் அதன் வட் டிக்காகவும் சேர்த்து வரி வசூலிப்பவனுக்காக உழைத்த னர். நாட்கள் செல்லச் செல்ல வட்டியும் முதலும் சேர்ந்து மீனனின் மகன் அவர்களின் நிலங்களையே கைப் பற்றச் செய்தது. இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவர் களுக்குப் பழைய வீடு அவ்வளவு நல்லதாக இல்லை. தீபிஸின் அரசனைப் போலப் பெருங் கட்டடம் ஒன்று கட்டினுன். கூட்டத்தைத் தடுக்க பெரும் சுவர் எழுப்பி னுன். ஆயுதம் தரித்த மெய்ப்பாதுகாவலரின்றி மீன னின் மகன் வெளியே செல்வதில்லை. 'பெரிய வீட்டுக்குரி யவன்' எனப் பொருள்படும்படி, 'பாரோ' என்றழைக்கப் பட்ட தீபிஸின் மன்னனுடன், எகிப்திலேயே பெரியதான அவன் அரண்மனையில் ஆண்டுக்கிருமுறை தங்குவதற் காகத் தீபிஸுக்குச் சென்று வந்தான். ஒரு முறை இளைஞ னும் அழகனுமான தன் மகனையும் உடன் அழைத்துச் சென்றுன்.

பாரோவின் மகள் இளைஞனைக் கண்டாள், காதல் கொண்டாள். இந்தத் திருமணத்தின் மூலம் மீனனின் மகனுக்கு வாய்ப்பு அதிகம் கிடைத்தது. இரக்கமில்லாமல், மக்களைக் கொடுமைப்படுத்தி வரிவசூலித்து, மூன்றுண்டுக ளுக்குள்ளாகவே தன் பணப் பெட்டியை நிரப்பினுன். அவன் இறந்தபொழுது அரச குடும்பத்தவரைப் புதைப்

பது பேர்லப் 'பிரமிட்' ஒன்றில் புதைக்கப்பட்டான். அவன் கல்லறையிலே பாரோவின் மகள் கண்ணீர் வடித்தாள்.

நைல் நதிக் கரையோரத்தில் எங்கோ தொடங்கி மூன்று தலைமுறைகளுக்குள் சாதாரணக் குடியானவன் ஒருவன் வளர்ந்து, அரண்மனைக் கருகில் அரசனுக்குச் சம மாக வாழ்ந்ததைப் பற்றிய கதைதான் இது.

மீனனுக்கு இருந்த வாய்ப்பும், வசதியும் அவனைப் போலவே ஆற்றலுள்ள சிலருக்கும் கிடைத்தது. அவர்க ளெல்லாம் ஒருதனிப் பிரிவாக இருந்தனர். அவர்கள் தங்களுக்குள் திருமணஞ் செய்துகொண்டு தங்கள் சொத் துக்களை ஒரு குறிப்பிட்டவர்களுக்குள் வைத்துக்கொண்ட னர். இவர்கள் அரசனுக்குச் சண்டையிலும், வரிவசூலி லும் அலுவலர்களாக இருந்தனர். தண்ணீர் வசதியும், சாலைப்பாதுகாப்பும் கவனித்து வந்தனர். உபயோகமான பலகாரியங்களைச் செய்தும், தங்களுக்குள் கடுமையான சட்டதிட்டங்களுக்கு உட்பட்டும் இருந்தனர். அரசன் கொடுங்கோலனாக இருந்தால் அவர்களும் அப்படியே இருந்தனர். அரசர்கள் பலமற்றவர்களா யிருந்தால் இந் தப் பிரபுக்களே நாட்டை ஆண்டனர்.

தங்களைக் கொடுமைப் படுத்தியவர்களைக் கொதித் தெழுந்த மக்கள் அழித்தனர்; பழம் பிரபுக்கள் கொல்லப் பட்டு நிலம் பிரிக்கப்பட்டது; எல்லோருக்கும் சம உரிமை கொடுக்கப்பட்டது.

சில நாட்களுக்குப் பிறகு, பழைய கதை திரும்பியது. இம்முறை பூச்சியின் சந்ததியில் திறமையான ஒருவன் தன் முயற்சியாலும், உழைப்பாலும் முன்னேறிப் பிரபுவா னான்; மீனனின் சந்ததிகள் ஏழைகளாயினர்.

வேறு மாற்றங்கள் எதுவும் ஏற்படவில்லை. உண்மை யான உழவர்கள் ஒழுங்காக வேலை செய்து தங்கள் தங்கள் வரியையும் செலுத்தினர். வரிவசூலிப்பவரும் வசூலித் துச் செல்வத்தைப் பெருக்கினர்.

மனிதர்களின் ஆசைகளைப்பற்றிக் கவலைகொள்ளா மல், காலத்தைக் கடந்து நிற்கும் கரைகளின் இடையே ஓடி, இயற்கையின் நியதியை ஒட்டி, ஏழை பணக்காரன் என்ற வித்தியாசமின்றி எல்லோருக்கும் வளத்தை வாரி யிறைத்து நைல்நதி நியாயம் வழங்கியது.

# எகிப்தின் எழுச்சியும் வீழ்ச்சியும்

"நாகரிகம் மேற்கு நோக்கிப் பயணம் செய்கிறது" என்று பேசப்படுவதை நாம் அடிக்கடி கேட்கிறோம். நமக்கு முன் உழைத்து வழிகாட்டியவர்கள் அட்லாண்டிக் கடலைக் கடந்து புதிய இங்கிலாந்து, புதிய நெதர்லாந்துக் கரைகளில் தங்கினர்; அவர்களின் குழந்தைகள் பரந்த புல்வெளிகளைக் கடந்தனர்; அவர்களின் சந்ததிகள் கலிபோர்னியாவுக்கு வந்தனர்; இன்றைய சந்ததிகள் பரந்த பசிபிக் கடலை இந்நூற்றாண்டில் முக்கியத்துவம் உள்ளதாகச் செய்ய முயன்று கொண்டிருக்கின்றனர்.

உண்மையாகக் கூறுமிடத்து, (நாகரீகம்) ஒரே இடத்தில் அதிக காலம் நீடித்திருப்பதில்லை. அது எப்பொழுதும் எங்கேயோ போய்கொண்டிருக்கிறதே ஒழிய, மேற்கு நோக்கியே எப்பொழுதும் செல்வதில்லை. சில சமயங்களில் கிழக்கிலோ, அல்லது தெற்கிலோ செல்லுகிறது. தேசப் படத்தின் குறுக்கும் நெடுக்குமாகச் செல்கிறது. ஆனால், அது நகர்ந்துகொண்டே யிருக்கிறது. இருநூறு அல்லது முந்நூறு ஆண்டுகளுக்குப் பிறகு, "நான் இந்தக் குறிப்பிட்ட மக்களுடன் அதிகக்காலம் இருந்துவிட்டேன்" என்று நாகரீகம் கூறிவிட்டுத் தன் புத்தகங்கள், அறிவியல், கலை, இசை முதலிய மூட்டை முடிச்சுகளுடன் புது இடங்களைத் தேடி அலைகிறது. அது எங்கே செல்

கிறது என்று யாருக்கும் தெரியாது. இதுதான் வாழ்வில் உற்சாகத்தை ஊட்டுகிறது.

எகிப்தில், நாகரீகத்தின் நிலைக்களம் நைல்நதிக் கரையின் வடக்கிலும், தெற்கிலும் செல்கிறது. முதன் முதலில் ஆப்பிரிக்காவிலிருந்தும், மேற்கு ஆசியாவிலிருந்தும் மக்கள் பள்ளத்தாக்கில் வந்து தங்கினர். அதன் பிறகு கிராமங்களை அமைத்தும், நகரைக் கட்டியும் வாழ்ந்தனர். 'பாரோ' என்றழைக்கப்பட்ட பண்டைத் தலைவனின் ஆட்சிக்கு கீழ்ப்படிந்தனர். எகிப்தின் கீழ்ப் பகுதியிலுள்ள மெம்பிஸ் என்ற தலைநகரில் வாழ்ந்தான்.

ஈராயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு, இந்தப் பழம் சந்ததியார்கள் மிகவும் பலவீனமடைந்து தங்களைக்கூடக் காப்பாற்ற சக்தியற்ற நிலையில் இருந்தனர். மேல் எகிப்தில் 350 மைல் தெற்கில் உள்ள தீடீஸ் நகரத்தில் இருந்து வந்த ஒருபுதுக் குடும்பத்தினர், பரந்த பள்ளத்தாக்கு முழுவதும் ஆட்சி செய்ய முயன்றனர். கருத்துக்கு முன் 2400-ல் அவர்கள் வெற்றியடைந்தனர். எகிப்தின் மேல் பாதியையும், கீழ்ப்பகுதியையும் ஆண்டுவந்தவர்கள், உலகில் எஞ்சிய பாகத்தைக் கைப்பற்ற முயன்றனர். இதற்கு முன் சென்றிராத நைல்நதியின் பிறப்பிடத்திற்குச் சென்று கறுப்பு எத்தியோப்பியாவைக் கைப்பற்றினர். அடுத்தபடியாகச் சினய் பாலைவனத்தைக் கடந்து, சிரியாவிற்குள் படையெடுத்துத் தங்கள் பெயரைக் கேட்டு பாபிலோனியர்களும், அசிரியர்களும் பயப்படும்படி செய்தனர். எகிப்தைச் சுற்றிலுமுள்ள பிரதேசங்கள் அவர்கள் வசமிருந்ததால், எகிப்தின் பாதுகாப்புப் பற்றிக் கவலையின்றிப் பள்ளத்தாக்கு முழுவதிலும் நிரம்பியிருந்த மக்களின் வாழ்வை வளமுள்ளதாக்க முயன்றனர். புதிய அணைகளும், அணைக்கட்டுகளும் கட்டினர். பாலைவனத்தில்

ஒரு பெரிய நீர்த்தேக்கங் கட்டி, நைல்நதியின் நீரைத் தேக்கி அதை வரண்ட காலங்களில் பயன்படுத்தினர்.

கணிதமும், வானநூலும் படிக்க மக்கள் தொடங்கினர். அதன்மூலம் நைல் நதியில் வெள்ளம்வரும் நேரத்தைக் கண்டறிந்தனர். இம்மாதிரிக் காரியங்களுக்காகக் காலத்தைக் கணக்கிடக் குறுக்குவழி தேவைப்பட்டது. 365 நாட்கள் கொண்ட ஆண்டுகள் பன்னிரண்டு மாதங்களாகப் பிரிக்கப்பட்டது. அந்நியர்களிடமிருந்து ஒதுங்கி வாழ்ந்த பழைய முறைக்கு மாறாக, தங்கள் துறைமுகத்திற்குவரும் வேற்றுநாட்டுப் பொருள்களுடன் எகிப்துப் பொருள்களைப் பண்டமாற்றுச் செய்தனர்.

கிரீஸ் நாட்டுக் கிரேக்கர்களுடனும், மேற்கு ஆசியாவின் அராபியர்களுடனும் வியாபாரம் செய்தனர். இந்தியர்களிடமிருந்து வாசனைப் பொருள்களையும், சீனாவிலிருந்து பட்டும் பொன்னும் இறக்குமதி செய்தனர். மனிதனின் எல்லாப் படைப்புக்களிலும் வாழ்வும் தாழ்வும் சில குறிப்பிட்ட சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு இருக்கின்றன. எந்த ஒரு நாடோ அல்லது ஒரு பரம்பரையோ அதற்கு விலக்கல்ல. நானூறு ஆண்டு நல்வாழ்விற்குப் பிறகு இந்தப் பெரும் மன்னர்கள் தளர்வுற்றனர். படைக்களத்தில் ஒட்டகையின்மீது சவாரி செய்து தலைமை தாங்குவதைவிட அரண்மனையில் தங்கிக் குழலின் இன்னிசையைக் கேட்கவே எகிப்து மன்னர்கள் பெரிதும் விரும்பினர்.

காட்டுமிராண்டிகளான சில குதிரை வீரர்கள், எகிப்தின் எல்லைப்புறத்தில் தொல்லை கொடுப்பதாகச் செய்தி தீபிஸ் நகருக்கு ஒருநாள் வந்தது. அவர்களைத் துரத்துவதற்காக ஒரு படை அனுப்பப்பட்டது. படை பாலைவனத்திற் புகுந்தது. அராபியர்கள் அவர்களைக் கொன்று தங்கள் மூட்டை முடிச்சு, ஆடு இவற்றுடன்

நைல்நதியை நோக்கி வந்தனர். அவர்களைத் தடுத்து நிறுத்த மற்றொரு படையும் அனுப்பப்பட்டது. கடுமையான போருக்குப் பிறகு எதிப்தியர்கள் தோற்றனர். நைல்நதிப் பள்ளத்தாக்கு, படையெடுத்து வந்தவர்களுக்குத் திறந்து விடப்பட்டது.

அவர்கள் வேகமாகச் செல்லும் குதிரைகளிற் சவாரி செய்தனர், வில்லையும், அம்பையும் உபயோகித்தனர். குறுகிய காலத்தில் அந்நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றினர். ஐந்து நூற்றாண்டுகள் எகிப்தை ஆண்டனர். பழைய தலைநகரை நைல்நதியின் டெல்டாப் பிரதேசத்திற்கு மாற்றினார்கள். எகிப்துக் குடியானவர்களை அடக்கிக் கொடுமைப் படுத்தினர். மனிதர்களைக் கொடுமைப் படுத்தி, குழந்தைகளைக் கொன்று, பழைய கடவுளைப்பற்றிக் கவலையின்றி இருந்தனர். நகரங்களில் வாழ மனமின்றித் தங்கள் கூட்டத்துடன் திறந்த வெளிகளில் தங்கினர். அதுபற்றியே 'ஆட்டு அரசர்கள்' எனப் பொருள்படும், 'ஹைக்காஸ்' என்று அவர்கள் அழைக்கப்பட்டனர்.

கடைசியாக, அவர்களின் கொடுங்கோன்மை சகிக்க முடியாத அளவிற்குப் பெருகியது.

அந்நியப் படையெடுப்பை எதிர்த்துக் கிளர்ந்த புரட்சியில் தலைமைதாங்க தீபிஸ் நகரைப் பிரபுக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் இசைந்தனர். அந்தப் பயங்கரச் சண்டையில் எகிப்தியர்கள் வெற்றிபெற்றனர். 'ஆட்டு அரசர்கள்' நாட்டிலிருந்து விரட்டப்பட்டுத் தாங்கள் முன்பிருந்த பாலைவனத்திற்கே திரும்பிச் சென்றனர். இந்த அனுபவம் எகிப்திய மக்களுக்கு ஓர் எச்சரிக்கையாக இருந்தது. ஐந்நூறு ஆண்டுகள் அந்நியருக்கு அடிமைப்பட்டிருந்தது, அவர்களுக்குப் பயங்கர அனுபவமாயிருந்தது. இம்

மாதிரி அனுபவம் மறுபடியும் ஏற்படக்கூடாது என எண்ணிப் புனித பூமியை மாற்றூர்கள் தாக்க முடியாத வாறு தாய்நாட்டின் எல்லைப் பகுதியைப் பலமுள்ளதாக ஆக்கினர்.

தீபிஸின் புதிய மன்னஞன டெத்மாசிஸ் ஆசியாவின் மேல் படையெடுத்து, மெஸெபடோமியச் சமவெளி வரை யிற்சென்ருன். யூப்பிரடிஸ் நதியில் தன் எருதுகளின் தாகம் தணித்தான். பாபிலோனும், நெனிவேயும் அவன் பேரைக் கேட்டு நடுநடுங்கின. அவன் சென்ற இடமெல்லாம் பல மான கோட்டைகள் கட்டி அத்துடன் நல்ல சாலைகளையும் அமைத்தான். எதிர்காலத்தில் படையெடுப்பிற்குப் பெரும் தடைகளாக இவைகளைக் கட்டிவிட்டு வீடு திரும் பியபின் டெத்மாசிஸ் இறந்தான். அவன் மகள் காத்சிப் சட் அவன் விட்ட வேலையைத் தொடர்ந்து செய்தாள். 'ஆட்டரசர்கள்' அழித்த கோயில்களைப் புதுப்பித்தாள். பொது நன்மைக்காக வீரர்களும், வியாபாரிகளும் ஒத் துழைக்கும் ஒரு பலமுள்ள நாடாக எகிப்தை ஆக்கினுள். அந்தப் புதிய இராச்சியம் 1600 லிருந்து, 1300 (கிறித்து வுக்கு முன்) வரை இருந்தது.

இராணுவ ஆட்சி அதிகநாள் நீடிப்பதில்லை. பேரர சாக இருந்தால் அதைக் காப்பதற்கு அதிக ஆட்கள் தேவை. ஆதலால், படையில் அதிக ஆட்கள் இருப்பார் கள். ஒரு சிலர்தான் வீட்டில் தங்கிப் பண்ணை வேலை களைக் கவனித்து வாணிகப் பொருளை உற்பத்தி செய் தனர். சில வருடங்களுக்குள் எகிப்து அரசாங்கம் பெரி தாகி, அந்நியப் படையெடுப்பைத் தடுக்க ஏற்பட்ட அதன் படை, திறமையான் ஆட்களும் பணமும் அற்ற ஒரு பாழ் பட்ட நாடாக எகிப்தை ஆக்கியது. நாகரீக உலகத்தின் செல்வங்களைத் தன்னகத்தே கொண்டு, உறுதியுடன்

ஓங்கி வளர்ந்திருந்த எகிப்துக் கோட்டைச்சுவரை ஆசியக் காட்டுமிராண்டு மக்கள், தொடர்ச்சியாகத் தாக்கி வந்தனர்.

முதன் முதலில் எகிப்துக் கோட்டைகள் பிறர் வசமாகாமல் தனித்திருந்தன. தொலைவிலுள்ள மெஸெபடோமியாவில் ஒருநாள் அசிரியா என்றழைக்கப்பட்ட ஒரு புதிய இராணுவ ஆட்சி தோன்றியது. விஞ்ஞானம் பற்றி விருப்போ, கலைபற்றிக் கவலையோ கொள்ளாமல் அசிரியா சண்டையிட்டது. எதிப்தியர்களுக்கு எதிராகப் படையெடுத்து, அவர்களைத் தோற்கடித்தது அசிரியா. இருபது ஆண்டுகளுக்கு அதிகமாக அவர்கள் நைல்நதிப் பிரதேசத்தை ஆண்டனர்; எகிப்தின் அழிவின் ஆரம்பமும் அங்கே தொடங்கியது

சிற்சில சமயங்களில், கொஞ்சக் காலத்திற்கு எகிப்தியர்கள் இழந்த சுதந்திரத்தைத் திரும்பப் பெற்றனர். மிகப் பழைய இனத்தவர்களான எகிப்தியர்கள், நூற்றுண்டுக் கணக்கான கடின உழைப்பால் வலிமை இழந்துவிட்டார்கள். வரலாற்றினின்றும் மறைந்து, உலக நாகரீகத்தின் தலைமைப் பதவியையும் விட்டுவிடும் காலம் அவர்களுக்கு வந்துவிட்டது. நைல்நதியின் முகத்துவாரத்திலுள்ள நகரங்களில் கிரேக்க வணிகர்கள் பலர் வந்து குழுமியிருந்தனர்.

நைல்நதியின் முகத்துவாரத்திற்கு அருகே செய்யிஸ் என்னுமிடத்தில் ஒரு புதிய தலைநகர் கட்டப்பட்டு, எகிப்து ஒரு வியாபார நாடாயிற்று. ஆசியா—ஐரோப்பா வாணிகத்திற்கு, நடுவாயிருந்து பெரிதும் உதவிற்று.

கிரேக்கர்களுக்குப் பிறகு பாரசீகர்கள் வந்து ஆப்பிரிக்காவின் வடபகுதி முழுவதையும் வென்றனர். இரண்டு நூற்றுண்டுகளுக்கு பிறகு, பாரோக்களின் பழம்பூமியை

அலெக்ஸாந்தர் ஒரு கிரேக்க மாகாணமாக ஆக்கினுன். அவன் இறந்த பிறகு அவன் தளபதிகளில் ஒருவனுன டாலமி என்பவன், தன்னைப் புதிய எகிப்தின் சுயேச்சை மன்னனுக ஆக்கிக்கொண்டான். டாலமியின் குடும்பத்தினர் இருநூறு ஆண்டுகள் வரை ஆண்டனர்.

கிறித்து பிறப்பதற்கு 30 ஆண்டுகளுக்குமுன், டாலமியின் வம்சத்தின் கடைசி அரசியான கிளியோபாத்ரா, வெற்றி கண்ட உரோமத் தளபதி ஆக்டேவியானஸின் கைதியாகாமல் தற்கொலை செய்துகொண்டாள். அத்துடன் அந்த வம்சம் முடிவுற்றது. அதன் பிறகு சுயேச்சை நாடான எகிப்து நிலை மாறி உரோமப் பேரரசின் ஒரு பகுதியாகவே இருந்தது.

# நதியிடை நாடு

## மெஸெபடோமியா

உயர்ந்த பிரமிட்டின் உச்சிக்கு உன்னை நான் இப்போது அழைத்துச் செல்லப் போகிறேன். நன்ருகத் தொத்திச் சென்ருல்தான் உச்சியை அடைய முடியும். இந்தச் செயற்கை மலையைச் செய்வதற்குப் பயன்பட்ட கடப்பைக் கற்களும், அதை மூடுவதற்கு உபயோகிக்கப் பட்ட நல்லபல கற்களும் காணப்படவில்லை. உரோமானியர் தம் புதிய நகரங்களைக் கட்டுவதற்காகத் திருடிச் சென்றுவிட்டனர். இந்த விசித்திரமான மலையுச்சியிலிருந்து உல்லாசமாக ஊரைப் பார்த்துக்கொண்டிருக்கும் ஆடு அழகாயிருக்கிறது. சில அராபியப் பையன்களுடன், சிறிது சிரமத்திற்குப் பிறகு நாம் இதன் உச்சியை அடையலாம். அங்கே தங்கி மனித இன வரலாற்றின் அடுத்த அத்தியாயத்தைப் பார்க்கலாம்.

அங்கே—ஆம்—தொலைதூரத்தில் பரந்த பாலைவெளியின் மஞ்சள் மணலுக்கு அப்பால், பழம்பெரும் நைல்நதி பாலையைக் கடந்து கடலிற் கலக்கும் இடத்திற்கும் அப்பால், உன் கழுகுக் கண்களால் பார்த்தால், ஒளிபட்டுச் சிதறும் பச்சைக்கொடி ஆடுவது தெரியும். இருபெரும் நதிகளுக்கிடையே உள்ள பள்ளத்தாக்குதான் அது. பழைய தேசப் படத்தின் மிகவும் முக்கியமான இடம் அது.

"பழைய ஏற்பாட்டின்" (Old Testament) சுவர்க்க பூமி அது. கிரேக்கர்களால் மெஸெபடோமியா என்றழைக்கப் பட்ட அற்புதமும, ஆச்சர்யமும் நிறைந்த நாடு அது.

'மெஸோஸ்' (Mesos) என்ருல் நடு, அல்லது இடை என்றும், 'பொடமாஸ்' (Potomos) என்ருல் கிரேக்க மொழியில் 'நதி' என்றும், பொருள். அதுபற்றியே நதி யில் வாழும் குதிரைக்கு ஹிப்போபாட்டமாஸ் எனப்பெயர் வந்தது. ஆகையால், மெஸெபடோமியா என்ருல் நதி யிடை நாடு எனப் பொருள்படும். பாபிலோனியர்கள் 'புராட்டு' என்றழைத்தது யூப்ரடீஸ் நதியும், 'திக்லாத்' என் றழைத்தது டைகிரீஸ் நதியுமாகும். தேசப்படத்தில் இந்த இரு நதிகளையும் காணலாம். ஆர்மீனியாவின் வடக்கு மலைத்தொடரில் பனிப்பாறையில் உற்பத்தியாகி, மெது வாகத் தெற்குச் சமவெளியிற் பாய்ந்து பாரசீக வளைகுடா வின் கலங்கிய கரையை அடைகிறது. இந்துமகா சமுத் திரத்தின் கிளைக்கடலின் பேரலைகளில் மறையுமுன், உப யோகமுள்ள ஒருபெரும் காரியத்தைச் சாதித்திருக் கின்றன, இந்நதிகள்.

வரண்டு உலர்ந்த பிரதேசத்தை, மேற்கு ஆசியாவின் ஒரே செழிப்பான இடமாக ஆக்கின. ஆதலால்தான் வடக்கு மலைவாசிகளும், தென் பாலைவாசிகளும் வதியும் மெஸெபடோமியா மிகவும் முக்கியம் வாய்ந்ததாக இருக் கிறது.

உயிர் வாழ்வன அனைத்தும் சுகமாக இருக்க விரும்பு வது நாம் நன்கு அறிந்த உண்மை. மழை பெய்யும்பொழுது பூனை தங்குமிடம் தேடி ஓடுகிறது. குளிரதிகமா யிருந் தால், நாய் கணப்படுப்புக்குள் இடம் தேடுகிறது. கடலின் ஒரு பகுதியில் முன்னிருந்ததைவிட உப்பு அதிகமாகி விட்டால், ஆயிரக்கணக்கான சின்னஞ்சிறு மீன் கூட்டங் கள், விரிந்த வாரிதியின் மற்றொரு பகுதிக்கு நீந்திச் செல்

கின்றன. பறவைகளோ வெனில், ஆண்டுக்கொரு முறை ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் பறந்து செல்லும். குளிர்காலம் வந்தால் வாத்துக்கள் வேறிடம் சென்றுவிடும். பட்டுப் பூச்சிகள் பறக்க ஆரம்பித்தால் கோடை பிறந்ததென நாம் களிப்படைகிறோம்.

மனிதனும் இந்த விதிக்கு விலக்கல்ல. குளிர்கால ஊசிக்காற்றைக் காட்டிலும், சூட்டடுப்பின் அனலைப் பெரிதும் விரும்புகிறான் அவன். ஒருதுண்டு ரொட்டியும், நல்ல சாப்பாடும் கிடைத்தால், சாப்பாட்டையே பெரிதும் விரும்புகிறான். தவிர்க்க முடியாத தேவை என்றால் பாலைவனத்தில், அல்லது துருவப் பிரதேசத்தின் பனி யிற் கூட வாழ்வான் அவன். தங்குவதற்குத் தகுதி யான இடமளித்தால், ஒருசிறிதும் தயக்கமின்றி ஒப்புக் கொள்வான். தன் நிலையை உயர்த்துவதில் உள்ள விருப் பம், வாழ்வைக் களைப்பாற்றி வளமாகச் செய்து கொள் ளும் ஆசை, உலகின் முன்னேற்றத்திற்கு முக்கியமாய் என்றுமே இருந்திருக்கிறது.

ஐரோப்பாவின் வெள்ளை இனத்தவரைப் பூமியின் கடைக் கோடிக்கு விரட்டியது அது.

நம் சொந்த நாட்டின் சமவெளியிலும், மலைப்பிர தேசத்திலும் மக்கள் வதியும்படி செய்ததும் அதுவே. பருவ நிலையும், தாங்கள் வாழ்வதற்கு வசதி உள்ள இடத்தைத் தேடி அது கிடைக்கும்வரை ஆயிரக்கணக் கான மக்களைக் கிழக்கிலிருந்து மேற்கும், தெற்கிலிருந்து வடக்கும் நிற்காமல் பிரயாணம் செய்யும்படி வைத்ததும் அதுதான்.

குறைந்த உழைப்பில் அதிக வசதியைத் தேடும், உயிர்வாழும் இனத்திற்கு உரிய உணர்ச்சி, மேற்கு ஆசியாவின் குளிர்ந்த மலைப் பிரதேசத்திலும், பாலைவனத்

திலும் வாழும் மக்களை மெஸெபடோமியாவின் வளமான பள்ளத்தாக்கில் புதிய இடம் தேடும்படி தூண்டியது. இந்தச் சுவர்க்க பூமியைச் சொந்தமாக ஆக்கிக் கொள்ள அவர்கள் போரிட நேர்ந்தது.

இந்த இன்ப பூமியைப் பற்றிக் கேள்விப்பட்டு, நூற்றுண்டுக் கணக்காக இதைக் கைப்பற்றி எண்ணி வந்த மக்களைத், தங்கள் குடும்பம், பண்ணை முதலியவைகளைத் தாக்காமல் தடுக்க அதிகத் துணிவும், ஆராய்ந்து செய்யும் திறனும் தேவைப்பட்டது.

தொடர்ந்துவந்த இந்தப் பூசலின் காரணமாக, ஏற்கெனவே வாழ்ந்த இனத்திற்கும், வளமான பூமியில் பங்கு கேட்கும் வாழவந்த இனத்திற்கும் எல்லையில்லாத போராட்டம் நடந்து வந்தது. அதிக சக்தியில்லாதவனும், பலஹீனனும் வெற்றிபெற முடியவில்லை. வீரனும், புத்திசாலியும் வெற்றி பெற்றனர். இவர்களால் உருவாக்கப்பட்டதால்தான் மெஸெபடோமியா ஒரு வலுவான இனத்தின் இருப்பிடமாகவும், பின் சந்ததிக்குப் பயனுள்ள ஒரு புகழ்பெற்ற நாகரீகத்தை உருவாக்கிய இடமாகவும் முடிந்தது.

# நக எழுத்தாளர்கள்

1472-ம் ஆண்டு, கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடிப்பதற்குச் சில காலத்திற்கு முன்பு, ஜோஸபட் பார்பாரோ என்பவன் வெனிஸ் நாட்டின் பெர்ஸிமாவில் பிரயாணம் செய்துகொண்டிருந்தான். சிராஸ் என்ற இடத்திற்கருகிலுள்ள குன்றுகள் அவனுக்குப் பெரிய புதிராக இருந்தன. சிராஸ் குன்றுகள் பழைய கோயில்களால் மூடப்பட்டிருந்தன. மலைப்பாறைகளில் இந்தக் கோயில்கள் பாறைகளில் செதுக்கப்பட்டிருந்தன. அங்குத் தொழுது வந்த ஆதிவாசிகள் நூற்றுண்டுகளுக்கு முன்பே மறைந்து விட்டனர். அதனால், அந்தக் கோயில்களும் பாழடைந்து விட்டன. கோயிற் சுவர்களில் புரியாத புது எழுத்துக்களில் புராணக் கதைகள் எழுதப் பட்டிருந்தன. கூர்மையான நகத்தால் கோடு கிழித்தது போலிருந்த இதைப் பார்பாரோ கவனித்தான்.

பெர்ஸியாவிலிருந்து திரும்பியதும் தான் கண்டவற்றைத் தன் நண்பர்களிடமும், மக்களிடமும் கூறினான். அந்தச் சமயத்தில் துருக்கியர்கள் ஐரோப்பாவில் படையெடுப்பதாக மிரட்டினர். மக்கள் படையெடுப்பிற் கவனமாயிருந்ததால், மேற்கு ஆசியாவின் மத்தியில் எங்கோ இருக்கும் 'புதிய, புரியாத எழுத்தைப்பற்றி யாருமே கவலைப் படவில்லை.

இரண்டரை நூற்ருண்டுகளுக்குப் பிறகு பீட்ரோ டெல்லாவாலி என்ற ரோமானிய இளைஞன், இருநூறு ஆண்டுகளுக்குமுன் பார்பாரோ பார்த்துச் சென்ற சிராஸ் குன்றுகளைப் பார்வையிட்டான். புரியாத அந்த எழுத்தைக் கண்டு அவனும் திகிலடைந்தான். ஆர்வமுள்ள இளைஞனதால் அந்த எழுத்துக்களை அப்படியே எழுதித் தன் நண்பனுக்கு அனுப்பினுன். அத்துடன் தன் பிரயாணக் குறிப்புகள் சிலவற்றையும் சேர்த்து அனுப்பினுன். டாக்டர் சிபானே நேபிள்ஸ் நகரில் மருத்துவத் தொழில் நடத்தி வந்தான். தன் மருத்துவத் தொழிலுடன் கல்வியில் ஆர்வம் கொண்டு பயின்றும் வந்தான். சிபானே அந்த விநோதமான உருவங்களைப் பிரதியெடுத்து மற்ற அறிவுக்கலை வல்லுநர்களிடம் காண்பித்தான். துரதிரஷ்ட வசமாக, ஐரோப்பா மறுபடியும் வேறு வேலைகளில் மூழ்கியிருந்தது.

பிராடஸ்டென்ட் பிரிவினருக்கும், கத்தோலிக்கருக்கும் இடையே பயங்கரப் போர் நடந்தது. மதக்கொள்கைகள் சிலவற்றில் ஈடுபாடுடையவர்கள், தம்முடன் மாறுபட்ட கருத்துக்கள் கொண்டவர்களைக் கொன்று குவித்தனர். ஆப்பு வடிவத்தில் உள்ள எழுத்தின் விளக்கத்தைக் கண்டுபிடிப்பதற்கு இடையே மற்றொரு நூற்ருண்டும் கடந்தது.

பதினெட்டாம் நூற்ருண்டு—சுறுசுறுப்பும், எதையும் அறியவேண்டும் என்ற மனமும் கொண்ட மக்களுக்குப் பொன்னுன காலம்—விஞ்ஞானப் புதிர்களை விரும்பினர் மக்கள். டென்மார்க்கைச் சேர்ந்த ஐந்தாம் பிரெடரிக், மேற்கு ஆசியாவிற்குத் தான் அனுப்ப இருக்கும் பிரயாணக் குழுவில் சேரக் கல்வியறிவுடையவர்களை அழைத்தான். அந்தக் குழுவிற் சேர எண்ணற்றவர்கள்

முன்வந்தனர். 1761-ல் கோபன் ஹேகனிலிருந்து கிளம்பிய அந்தப் பிரயாணம் ஆறு ஆண்டுகள் நீடித்தது. இந்த ஆறுண்டுக் காலத்திற்குள் பிரயாணக் குழுவில் கார்ஸ்டன் நெய்பர் (Karsten Niebuhr) என்பவரைத் தவிர ஏனையோர் இறந்தனர். உழவுத்தொழிலே மேற்கொண்ட ஜெர்மானியர் நெய்பர், தடித்த புத்தகங்களையுடைய நூல் நிலையத்தில் காலத்தைச் செலவிட்ட பேராசிரியர்களைக் காட்டிலும் துன்பங்களைத் தாங்கும் வல்லமை படைத்திருந்தார்.

நிலத்தை அளக்கும் வேலையில் இருந்த நெய்பர் நம் போற்றுதலுக்கு ஆளான இளைஞர் ஆவர். குழுவைச் சேர்ந்த ஏனையோர் இறந்தபிறகு தன்னந்தனியராகப் பிரயாணத்தைத் தொடர்ந்து பாழடைந்திருந்த பெர்சிபாலிஸ் (Prsepolis) என்ற இடத்திற்குவந்து, அங்கு ஒருமாத காலம் தங்கிப் பழுதடைந்த அரண்மனைச் சுவரிலும், பாழடைந்த கோவில்களின் மதிலிலும் காணப்பட்ட எழுத்துக்களின் பிரதிகளை யெடுத்தார். டென்மார்க்(Denmark)குக்குத் திரும்பிய பிறகு தாம் கண்டுபிடித்தவைகளை விஞ்ஞான உலகின் நலங்கருதி (அச்சிட்டு) வெளியிட்டார். தம் சொந்தப் புத்தகத்திலிருந்து சிலவற்றைப் படிக்க முயன்றுர். ஆனல் அவர் வெற்றிபெறமுடியவில்லை. அவர் எடுத்துக்சொண்ட வேலையில் உள்ள சிக்கலையும், சிரமத்தையும் அறிந்த நாம் அவர் வெற்றி பெறுதது குறித்து ஆச்சர்யப் படுவதற்கில்லை.

எகிப்தின் புராதன வரிவடிவ எழுத்துக்களைப் புரிந்து கொள்ள, சேம்பலியன் (Champollion) சிறு படங்களிலிருந்து தன் பாடத்தை ஆரம்பித்தான்.

பெர்சிபாலிஸிலுள்ள எழுத்துக்களில் எந்தவிதமான படத்தையும் காணவில்லை. அவைகள் V-வடிவமுள்ள

எழுத்துக்களில் இருந்தன. இவையே முடிவில்லாமல் மறுபடியும் மறுபடியும் தோன்றினவாதலால், ஐரோப்பியர்களின் கண்களுக்கு எதையும் உணர்த்த முடியாமலிருந்தன.

தற்பொழுது, புதிர் அவிழ்க்கப்பட்ட பிறகு, சுமேரியர்களின் மூல எழுத்துக்களும் எகிப்தியர்களைப் போன்றே வரிவடிவ மொழியாக இருந்தது என அறிகிறோம்.

எகிப்தியர்கள் நீண்ட காலத்திற்கு முன்பே பாப்பைரஸ் இலையைக் கண்டுபிடித்து, வடிவங்களை வழவழப்பான இலையின் மேல்பாகத்தில் வரைந்தனர், மெஸெபடோமியாவில் வசித்தவர்கள் தங்கள் எழுத்துக்களைக் கடினமான மலைப் பாறைகளிலாவது அல்லது களிமண்ணாலான மிருதுவான செங்கல்லிலாவது செதுக்கினர்.

தேவையின் அவசியத்தை உணர்ந்து, தங்களுடைய சிந்தனையில் முதலில் தோன்றிய படங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சிறிது படுத்திக்கொண்டனர், அவர்களுடைய தேவையைப் பூர்த்தி செய்துகொள்ளப் போதுமான, 500 க்கும் அதிகமான வெவ்வேறு எழுத்துக்களைக் கண்டு பிடித்தனர்.

அவற்றின் உதாரணங்கள் சில பின்வருமாறு:—

முதன் முதலில், செங்கல்லில் நகத்தால் ஒரு நட்சத்திரம் போன்ற உருவம் வரையப்பட்டது.

ஆனல், சிறிது காலத்திற்குப் பிறகு, நட்சத்திரத்தைக் குறிக்கும் வடிவம் அதிகச் சிக்கல் கொண்டதாக இருந்ததால் கைவிடப்பட்டு, வேறொரு உருவம் அமைக்கப்பட்டது.

இன்னுஞ் சிறிது காலத்திற்குப் பிறகு 'தேவ லோகம்' என்ற பொருளும், நட்சத்திரத்துடன் இணைக்கப்பட்டு, அதன் வடிவமும் வேறுவிதமாக மாற்றப்பட்டு, ஏற்கனவே இருந்ததைக் காட்டிலும் ஒரு பெரும்புதிராக அமைக்கப் பட்டது.

அதே முறையில், எருது ஒன்றைக் குறிக்கும் வடிவமும் பல மாறுதலை அடைந்தது. மீனின் உருவமும் மாறுதல் அடைந்தது. முதன் முதலிற் சூரியனைக் குறித்த ஒரு வட்டமும் மாறிற்று.

இம்மாதிரி விந்தையான வடிவங்களின் பொருளைப் புரிந்துகொள்வது எவ்வளவு கடினமான காரியம் என்பது இப்பொழுது புரிகிறதல்லவா? குரோடிபாண்ட் (Grotefond) என்ற ஜெர்மானியப் பள்ளி ஆசிரியர் ஒருவரின் சலியாத உழைப்பின் பயனாக, நெய்பரின் புத்தகம வெளியிடப்பட்ட முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு, ஆப்பு வடிவ எழுத்துக்கள் கண்டுபிடிக்கப்பட்டு மூன்று நான்காண்டுகளுக்குப் பின், நான்கு எழுத்துக்களின் பொருளைப் புரிந்துகொள்ள முடிந்தது.

டி (D), ஏ (A), ஆர் (R), சா (Sh) என்ற நான்கு எழுத்துக்கள்தான் அவை. இவைகள் டாரஸ் (Dareush) என்ற அரசனின் பெயரைக் குறிக்கிறது. நாம் அதை டாரியஸ் (Darius) என்றழைக்கிறோம்.

அதன் பிறகு, உலகம் முழுதும் ஒரு பெரும் நகராகத் தோன்றும்படி செய்வித்த தந்திக் கம்பங்களும், தபால் போக்குவரத்தும் தோன்றுவதற்கு முன்பு மட்டுமே நடக்கக்கூடிய ஒரு சம்பவம் நிகழ்ந்தது. பொறுமையுள்ள ஐரோப்பியப் பேராசிரியர்கள், புதிதாக முளைத்த ஆசியப் புதிரை விடுவிக்க இரவு நேரத்தில் விளக்கடியில் தங்கள் நேரத்தைச் செலவிட்டுக்கொண்டிருந்த அதே நேரத்தில்

ஹென்ரி ராலின்சன் (Henry Raolinson) என்ற இளைஞன் பிரித்தானியர்களின் கிழக்கு இந்தியக் கம்பெனியிற் பணி யாற்றிவந்தான். தன்னுடைய ஓய்வு நேரத்தில் பெர்ஸி யன் மொழியை அவன் கற்றுவந்தான், தன் படைகளைப் பயிற்றுவிக்கச் சில ஆட்கள் தருமாறு ஆங்கிலேய ஆட்சியினரைக் கேட்டுக்கொண்டார் பெர்ஸியாவின் ஷா. அதன்படி ராலின்சன் டெஹ்ரானுக்குச் (Toheran) செல் லும்படி பணிக்கப்பட்டான். பெர்ஸியா முழுவதும் சுற்றி வந்த ராலின்சன், ஒரு நாள் பெயிஸ்டன் (Behistun) என்ற கிராமத்தைப் பார்வையிட நேர்ந்தது. "கடவுளர்களின் உறைவிடம்" எனப் பொருள்படும் பாகிஸ்தாண (Bagis tana) என்றழைத்தனர், பெர்ஸியர்கள் அந்தக் கிராமத்தை. பெர்சியர்களின் பண்டை இருப்பிடமான இரானிலிருந்து நூற்றுண்டுகளுக்கு முன்பு மெசெபடோமியாவுக்குச் செல் லும் பாதை இந்தக் கிராமத்தின் வழியாகச் சென்றது. பெர்சிய மன்னன் டாரியஸ் தன் புகழை அவனிக்கு எடுத் துரைக்க உயர்ந்த மதில்களையும், மலைக்குன்றுகளையும் அங்கே அமைத்திருந்தான்.

பாதையோரத்தில், சற்று உயரமான இடத்தில் தன் புகழ்வாய்ந்த செயல்களைப் பற்றிய விபரத்தைச் செதுக்கி வைத்தான். இந்த எழுத்துக்கள் பெர்சிய மொழியான பாபிலோனியனிலும், (Susa) நகரின் மொழியிலும் இருக்கி றது. படித்துப் புரிந்துகொள்ள முடியாதவர்களுக்கு இந்தக் கதையைக்கூற அழகான சிற்பம் ஒன்றும் இத் துடன் வரையப்பட்டிருக்கிறது. வாசுக்காரர்களிடமிருந்து அரச உரிமையைப் பறிக்க முயன்ற கௌமதா (Gaumata) என்பவனின் உடல்மேல் தன் காலை ஊன்றி, வெற்றிப் பெருமிதத்துடன் பெர்சிய மன்னன் நிற்பதுபோல், அதில் காணப்படுகிறது. காட்சியைத் தெளிவுபடுத்தும் பொருட்டு, கௌதமனின் ஆட்கள் சிலர், கைகள் கட்டப்

பட்டு மரணத்தை எதிர்நோக்கிக் கௌமதாவின் பின்புறம் நின்றுகொண்டிருப்பது போல் சித்தரிக்கப்பட்டிருக்கிறது.

அந்தப் படமும், விளக்கமும் பாதையிலிருந்து நூற்றுக்கணக்கான அடி உயரத்தில் இருந்தன. உயிருக்கும், உடலுக்கும் அபாயம் விளைவிக்கும் அந்த உயரத்தைப் பொருட்படுத்தாது, உயர்ந்த பாறையின் உச்சியில் உள்ள அந்த எழுத்துக்களின் முழுப்பிரதியையும் எடுத்தான் ராலின்சன். இந்தச் செயலும் இதன் விளைவும் மிகவும் முக்கியம் வாய்ந்ததாக இருந்தது. எகிப்தின் ரோசாட்டி கல்லைப் போலவே, பெயிஸ்டன் குன்றும் புகழ்வாய்ந்ததாயிற்று. சுமேரியாவின் பழம்பெரும் நக எழுத்துக்களைக் கண்டு பிடிக்கும் முயற்சியில் கிரோட்டிபண்டுடன் சேர்ந்து ராலின்சனும் புகழைப் பகிர்ந்து கொண்டான். அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்ததுமில்லை. ஒருவரைப் பற்றி மற்றெருருவர் கேள்விப்பட்டதுமில்லை. ஜெர்மானியப் பள்ளி ஆசிரியரும், பிரித்தானிய அலுவலரும், எல்லா விஞ்ஞானிகளும் செய்வதைப்போல, பொதுநலத்திற்காகச் சேர்ந்து உழைத்தனர். பழம் எழுத்துக்களைப் பற்றிய அவர்களது ஆராய்ச்சி ஒவ்வொரு மாநிலத்திலும் மறுபதிப்பாக வெளிவந்தது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் மத்திய பகுதியில் ஆப்புவடிவமுள்ள எழுத்துக்களின் பொருளைப்புரிந்துகொள்ளும் நிலை ஏற்பட்டது. மனித இனத்தின் மற்றெருரு ரகசியம் தெரியலாயிற்று. ஆனால் இந்த எழுத்துக்களைக் கண்டுபிடித்த புத்திமான்களைப் பற்றி நாம் அதிகம் தெரிந்துகொள்ள முடியாமற் போயிற்று.

அவர்கள் வெள்ளை யினத்தவர்; சுமேரியர்கள் என்று அழைக்கப்பட்டவர். நாம் சோமர் என்றழைக்கும் நிலத்தில் அவர்கள் வாழ்ந்தனர். அவர்கள் அதை கெங்கி

(Kengi) என்றழைத்தனர். கெங்கி என்பதற்கு ‘நாணல் நாடு’ என்பது பொருள். இதிலிருந்து அவர்கள் மெசெபடோமியாப் பள்ளத்தாக்கின் சதுப்பு நிலப்பகுதில் வாழ்ந்தனர் என்று தெரிகிறது. முதன் முதலில் சுமேரியர்கள் மலையிலே வாழ்ந்தனர். ஆனால் வளமான நிலம், குன்றுகளிலிருந்து அவர்களைத் தன்னிடம் அழைத்துக்கொண்டது. மேற்கு ஆசியாவின் மலைப்பகுதிகளிலுள்ள தங்கள் பழைய இடத்தை விட்டு வந்த பிறகும், அவர்கள் தங்கள் பழைய பழக்க வழக்கங்களை அப்படியே விட்டுவிடவில்லை. அவற்றில் ஒன்று நமக்கு மிகவும் உற்சாகமளிப்பதாக இருக்கிறது. மேற்கு ஆசியாவின் குன்றுகளில் வதியும் அவர்கள், மலைக்குன்றுகளின் உச்சியில் உயர்ந்த மேடை ஒன்று எழுப்பி அதன்மேல் தங்கள் கடவுள்களை வைத்து வழிபட்டு வந்தார்கள். பரந்த சமவெளியில் அமைந்த அவர்களின் புதிய வீடுகளில் அம்மாதிரியான பாறைகள் இல்லாததால், தங்கள் பழைய முறைப்படி வணங்குமிடத்தைக் கட்ட முடியாமல் இருந்தது.

ஆசிய மக்கள் அனைவரும் பழைய பழக்க வழக்கங்களுக்கு ஆழ்ந்த மதிப்பு வைத்திருக்கிறார்கள். சுமேரிய மரபினரும் தாங்கள் தொழுகை நடத்தும் இடம், பல மைல்களுக்கு அப்பாலிருந்தும் நன்றாகத் தெரியும்படி இருக்க வேண்டும் என விரும்பினர். இந்தத் துன்பத்தைத் துடைப்பதற்காகவும், தங்களது முன்னோர்களின் கடவுளர்களிடம் நல்ல முறையாக நடந்து கொள்வதற்கும்விரும்பி, சுமேரியர்கள் உயர்ந்த குன்றுகளைப்போல் தோற்றமளித்த கோபுரங்களைக் கட்டி, அதன் உச்சியில் தங்கள் கடவுள்களுக்குப் புனிதத் தீயை (வேள்வித் தீயை) ஏற்றுவித்தனர். சுமேரியர்கள் மறைந்து பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு, நாம் இப்பொழுது பாபிலோன் என்றழைக்கும் பாப்–இரி என்ற நகரைக் கண்ட யூதர்கள், மெசெபடோ

மியாப் புல் தரையின் நடுவில் அமைந்திருக்கும் உயர்ந்த கோபுரங்களைக் கண்டு வியப்படைந்தனர். பழைய முறை (**Old Testament**)யில் நாம் கேள்விப்படும் பாபல் கோபுரம் (**The Tower of Babel**), அநேக நூற்றுண்டுகளுக்கு முன் பக்திமான்களான சுமேரியர்களால் கட்டப்பட்ட, செயற்கைக் குன்றின் சிதைந்த சித்திரமே தவிர வேறில்லை. அது ஒரு ஆச்சர்யமான அமைப்பாக இருந்தது. சுமேரியர்களுக்குப் படிகள் கட்டத் தெரியாது. கோபுரத்தைச் சுற்றிச் சாய்வான பாதை ஒன்று அமைத்து அதன் வழியாக, மெதுவாக மக்கள் அடியிலிருந்து உச்சிவரை சென்றனர். சில ஆண்டுகளுக்கு முன்பு நியூயார்க் நகரின் மத்திய பகுதியில் ஒரு புதிய ரயில் நிலையம் அமைக்கவேண்டியிருந்தது. ஒரே நேரத்தில் ஆயிரக்கணக்கான பிரயாணிகள் கீழிருந்து மேலே கொண்டுவரப்படும்படி அமைக்க வேண்டி யிருந்தது. படிக்கட்டுகள் அமைத்தால் கூட்டத்திலும், அவசரத்திலும் மக்கள் தடுமாறிப் பயங்கர விபத்து ஏற்படுமாதலால் அந்த எண்ணம் கைவிடப்பட்டது. இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்குப் பொறியியல் வல்லுநர்கள் சுமேரியர்களின் வழியைப் பின்பற்றினர். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மெசெபடோமியப் புல் வெளியில் முதன் முதல் வகுக்கப்பட்ட வழியைப் பின்பற்றி நியூயார்க் மத்திய இரயில் நிலையத்தில் சாய்வான பாதை அமைக்கப்பட்டது.

## ஆசியா, பாபிலோனியா

அமெரிக்காவை ஒரு 'உலேக்கூடம்' என்று அடிக்கடி அழைக்கிறோம் நாம். அப்படி அழைப்பதன் மூலம் உல கின் மற்ற பாகங்களிலிருந்து அட்லாண்டிக், பசிபிக் கடற்கரைகளின் ஓரமாகக் குழுமி, தங்கள் பிறந்த இடங் களில் இல்லாத மிகவும் அநுகூலமான சூழ்நிலேயில், புதிய வீடமைத்துப் புது வாழ்வு துவங்கினர் என்றும் அறிகி ரோம். நம் சொந்த நாட்டைக் காட்டிலும் மெசெபடோமியா மிகச்சிறிய நாடு என்பது மறுக்க முடியாத உண்மை. ஆனால், இந்தச் செழிப்பான பள்ளத்தாக்கு, உலகம் இது வரை காணாத உன்னத 'உலேக்கூடமாக'த் திகழ்ந்தது. ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகள் வரை புதிய இனத் தவர்களேத் தம்பால் ஈர்த்துக் கொண்டிருந்த டைகிரிஸ் (Tigris), யூப்ரடிஸ் (Euphratis) நதிக்கரைகளில் தங்கள் வாழ்வுக்காகப் போராடிய புத்தம் புதிய இனங்களின் வர லாற்றுக் கதைகள் மிகவும் ஆவலேத் தூண்டக்கூடியவை கள். ஆனால், அவர்களின் வீரத்தைப் பற்றிய வரலாறு சிறிய அளவில்தான் இருக்கிறது. நாம் முந்திய அத்தியா யத்தில் சந்தித்த சுமேரியர்கள் தங்கள் வரலாற்றைப் பாறைகளிலும், களிமண் துண்டுகளிலும் எழுதினர் என் கிறோம். மெசெபடோமியாவில் நாடோடி வாழ்வு நடாத் திய முதல் இனம் அவர்கள்தான். தங்களுக்கெனத் தனி யான வீடு, வயல், தோட்டம் இவைகளின்றிக் கூடாரங்

களில் வசித்து, ஆடு மாடுகளைப் புல்தரைகளில் மேய்த்து வாழ்ந்தனர். தண்ணீர் அதிகமாகவும் பச்சைப் புல்வெளி நிறைந்த இடத்தையும் தேடித் தங்கள் கூடாரங்களுடன் இடம் விட்டு இடம் நகர்ந்து வாழும் மக்களே நாடோடிகள் எனப்படுவர். நீண்டு, பரந்த சமவெளிகளில் எங்கேனும் அவர்களின் மண் குடில் காணப்பட்டது. அவர்கள் போர்த்திறம் வாய்ந்தவர்களாக இருந்தனர். நீண்ட நாட்களாகத் தங்களை எதிர்த்துவரும் அயல் நாட்டவரை வெற்றி கண்டுவந்தனர். ஆனால், நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு செமிடிக் பாலைவன மக்களான அக்கேடியன்ஸ் (Akkadians) என்றழைக்கப்படுபவர்கள் அரேபியாவிலிருந்து கிளம்பி, சுமேரியர்களை வென்று மெசபடோமியாவைக் கைப்பற்றினர். அக்கேடியன்ஸ் மன்னர்களில் மிகவும் கீர்த்தி வாய்ந்தவன் சார்கன் (Sargon) என்பவன்.

அவர்கள் அரசன், குடியேறியிருக்கும் நிலத்தவர்களான சுமேரியர்களின் எழுத்தில் தங்கள் செமிடிக் மொழியை எழுதத் தன் மக்களுக்குக் கற்றுக்கொடுத்தான். அவன் ஆட்சி மிகவும் பயன்தரத் தக்கதாயிருந்தது. அறிவும், செறிவும் நிறைந்து விளங்கியதால் அங்கு முதன் முதலில் வாழ்ந்தவர்களுக்கும், புதிதாகக் குடியேறியவர்களுக்கும் இருந்த வேறுபாடு நாளடைவில் ஒழிந்து, அவர்கள் ஒன்று சேர்ந்து அமைதியாகவும், ஆனந்தமாகவும் வாழ்ந்தனர். அவன் ஆட்சியின் புகழ் வெகு சீக்கிரத்தில் மேற்கு ஆசியா முழுதும், மற்ற நாடுகளுக்கும் பரவியது. அதன் புகழைக் கேள்வியுற்ற மற்றவர்களும் தங்கள் முயற்சியில் ஈடுபட்டனர். அமோரைட்ஸ் (Amorites) என அழைக்கப்படும் பாலைவன நாடோடிகளான புதிய இனத்தவர்கள், தங்கள் கூடாரங்களைச் சுருட்டிக்கொண்டு வடக்கு நோக்கிக் கிளம்பினர். அதன் பிறகு அந்தப் பள்ளத்தாக்கு முழுவதும் ஒரே போரும் குழப்பமுமாகவே

காட்சியளித்தது. கமுராபி (Hammurapi) என்ற அமோ ரைட்ஸ் தலைவன், பாப்-இலி (Bab-Ili) கடவுளின் வாயில் என்பது பொருள்) என்ற நகரத்தில் மிகப் பரந்த பாபி லோனியப் பேரரசின் மன்னனாக ஆனான். கிறித்து பிறப்ப தற்கு 21 நூற்றாண்டுகள் முன்பு வாழ்ந்த இந்த கமுராபி மிகவும் விந்தையான (வேடிக்கையான) மனிதன். பாபி லோனைப் பண்டை உலகில் மிக முக்கியம வாய்ந்த நகராக ஆக்கினான். தங்கள் மன்னர் சூரியக் கடவுளிடமிருந்து பெற்ற சட்டங்களை, கற்றறிந்த மத குருமார்கள் நாட்டில் அமுல் நடத்தினர், நல்ல முறையிலும், நடுநிலையிலும் நடத்தப்பட்டதால் வணிகர்கள் வாணிகம் செய்ய விரும்பினர். கமுராபியின் சட்டங்கள் இதைப் போன்று இன்னும் 40 பக்கங்கள் வரை இருக்கும். இந்தப் பண்டை நாள் பாபிலோனிய நாடு எல்லாத் துறைகளிலும் நன்றாக விளங்கியது. மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். சட்ட மும், ஒழுங்கும் மிகவும் கவனத்துடன் பாதுகாக்கப்பட்டு வந்தது. தற்கால நாகரீக நாடுகளில் இருப்பதைக் காட்டி லும் அதிக அளவில் பேசவும், எண்ணவும் உரிமை வழங் கப்பட்டது. ஆனால், உலகம் எப்பொழுதும் குறைவு இல்லாமல் நிறைவுடன் இருப்பதில்லை. வடக்கில் மலையி லிருந்து, முரடர்களாகவும், கொலைகாரர்களாகவும் வந்த இனத்தவர்கள் கமுராபியின் திறமையால் உண்டாக்கப் பட்ட வேலைகளை அழித்தனர்.

இந்தப் படையெடுப்பினை நடத்திய புதிய இனத்த வரின் பெயர் கிட்டைட்ச் (Hittites). சுமேரியர்களைப் பற்றித் தெரிந்த அளவைக் காட்டிலும் இந்தக் கிட்டைட் சுகளைப்பற்றி மிகவும் கொஞ்சம்தான் தெரியும். அவர் களைப்பற்றி பைபிளில் குறிபிடப்பட் டிருக்கிறது. அவர்கள் நாகரீகத்தின் பாழடைந்த சின்னங்கள் நீண்டு பரந்து விரவிக் கிடக்கின்றன. அவர்கள் விந்தையான

வரிவடிவ எழுத்தை உபயோகித்தார்கள். இதுவரை எவரும் அந்த எழுத்துக்களைப் புரிந்துகொண்டு அவற்றைப் படித்து விளங்கவைக்க முடியவில்லை. ஆட்சி முறையில் அவர்கள் தேர்ச்சி பெறவில்லை. அவர்கள் சில ஆண்டுகளே ஆட்சி செய்தனர். அதன் பிறகு அவர்களின் ஆட்சி சிறுசிறு பிரிவுகளாகிச் சிதைந்தது. அவர்களின் புகழில் எஞ்சியிருப்பது புரியாத பெயரும், மற்றவர்கள் மிகவும் சிரமப்பட்டுக் கவலையுடன் கட்டியவற்றையும் ஆக்கியவைகளையும் அழித்த பெருமையும் தான்.

அதன் பிறகு ஒரு படையெடுப்பு நடந்தது. இது முற்றிலும் மாறுபட்டது. காட்டுக் குணம் படைத்த பாலைவன நாடோடிகள், தங்கள் கடவுளான அசுரி (Assur) யின் பேரில் கொலைபுரிந்து, கொள்ளையடித்து வந்த இனத்தவர்கள்; அரேபியாவைவிட்டு வடக்கு நோக்கிச் சென்று மலைச்சாரலை யடைந்தனர். அங்கிருந்து கிழக்கு நோக்கித் திரும்பி யூப்ரடிஸ் நதிக் கரையில் ஒரு நகரைக் கட்டினர். அதற்கு நினுவே (Ninua) என்று பெயர் (கிரேக்க எழுத்தான நினிவா (Ninevah) என்பதிலிருந்து வந்தது). அசிரியன்ஸ் என்றழைக்கப்படும் இந்தப் புதிய இனத்தவர்கள் மெசெபடோமியாவில் உள்ள மற்ற இனத்தவர்களை மெதுவாக, ஆனால், பயங்கரப் போரிட்டு வெற்றி கண்டனர். கிறித்துவுக்கு முன் பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு, பாபிலோனை அழிக்க அவர்கள் செய்த முதல் முயற்சியில் சிறிது வெற்றியும் பெற்றனர். ஆனால் அவர்களின் அரசன் திகலாத் பில்சர் (Tiglaht Pileser) தோற்கடிக்கப்பட்டுத் தன் சொந்த நாட்டிற்குத் திரும்பினான். ஐநூறு ஆண்டுகளுக்குப் பிறகு அவர்கள் மறுபடியும் முயற்சி செய்தனர். போர்ப் பிரியனான புலு (Bulu) என்பவன், அசிரியர் ஆட்சியைக் கைப்பற்றித் தலைமைதாங்கினான். அசிரியர்களின் வீரத்தலைவனாகக் கருதப்பட்ட திக

லாத் பில்சர் என்ற பழம்பெயரை வைத்துக் கொண்டு. உலகம் முழுவதும் வெற்றிகாண வேண்டும் என்ற ஆவலை அறிவித்தான்.

அவன் தன் வார்த்தைப்படியே நடந்தான். ஆசியா மைனர், அர்மீனியா, எகிப்து, வடக்கு அரேபியா, மேற்கு பெர்சியா, பாபிலோனியா முதலிய நாடுகள் அசிரிய மாகாணங்களாக ஆயின. இவைகள் எல்லாம் அசிரிய ஆட்சியாளர்களால் அரசாளப்பட்டன. வரிவசூலித்து இளைஞர்களைக் கட்டாயப்படுத்தி அசிரியப் படையிற் சேரும்படி செய்தான். அவர்களின் பேராசை, கொடுமை இவற்ருல் தாக்கப்பட்ட மக்கள் அவர்களை வெறுத்து ஒதுக்கினர். அதிர்ஷ்டவசமாக அசிரிய ஆட்சி அதிகநாள் நீடித்திருக்கவில்லை. அதிகமான பாய்மரங்களையுடைய சிறிய கப்பல் போல இருந்தது அது. உழவர்கள் குறைவு; வீரர்கள் அதிகம். தளபதிகள் அதிகம், ஆனல் வியாபாரிகள் குறைவு. அரசனும் பிரபுக்களும் செல்வந்தராக வாழ்ந்தனர்; மக்கள் பசியால், வறுமையால் வாடினர். நாட்டில் அமைதி ஒரு சிறிதும் இல்லை. மக்களுக்கு நன்மை பயக்காத காரணங்களுக்காக யாருடனுவது, எங்காவது, ஏதாவது ஒரு காரணத்திற்காகச் சண்டையிட்டவண்ணம் இருந்தனர். சக்தியைச் செலவிட்டுத் தொடர்ந்து நடத்திய சண்டையினுல் அசிரியப் படை வீரர்கள் கொல்லப்பட்டும், கால், கை இழந்தும் போயினர். ஆதலால் அந்நியர்களைப் படையில் சேர்க்க வேண்டிய நிலை ஏற்பட்டது. தங்களுடைய வீடுகளை அழித்து, குழந்தை குட்டிகளைத் திருடிச் சென்ற அசிரியப் படைத் தலைவர்களிடம் அவர்கள் அன்பு இன்றி நடந்துகொண்டனர்; சரியாகச் சண்டையிடவில்லை. ஆதலால், அசிரிய ஆட்சியின் எல்லைப்புறம் பாதுகாப்பின்றி இருந்தது. விநோதமான புதிய இனத்தவர்கள் வடக்கில் எல்லைப் புறங்களைத்

தொடர்ந்து தாக்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் சிம்மேரியர்கள் (Cimmeriars) எனப்படுபவர்கள் ஒருவகைப் பிரிவினர். இவர்களைப் பற்றி முதன் முதலாக நாம்கேள்விப் பட்ட பொழுது, வடக்கு மலைப்பிரதேசங்களுக்கு அப்பால் உள்ள பரந்த சமவெளியில் வாழ்ந்து வந்தனர். ஒடிசிய (Odysseus)சின் பிரயாணம்பற்றிக் குறிப்பிடுகையில் ஓமர் (Homer) எப்பொழுதும் இருளில் மூழ்கிக்கிடக்கும் இடம் என்று, சிம்மேரியர்களின் இடத்தைப் பற்றிக் குறிப்பிடு கிறார். அவர்கள் வெள்ளை நிறத்தவர்கள்; ஆசியாவில் நாடோடிகளாக வாழ்ந்த மற்றொரு பிரிவினரான ஸ்கைத் தியன்ஸ் (Scythians) என்பவர்களால் தங்களின் பழைய இடத்திலிருந்து விரட்டப்பட்டவர்கள். தற்காலத்தில் கொசாக்ஸ் (Cossacks) என்று கூறப்படுபவர்களின் முன னோர்கள் தான் ஸ்கைத்தியன்ஸ். அந்தக் காலத்திலும் கூட அவர்கள் குதிரையேற்றத்தில் வல்லவர்களாக இருந்தனர்.

ஸ்கைத்தியன்ஸ்களால் விரட்டப்பட்ட சிம்மேரியர்கள் ஐரோப்பாவிலிருந்து ஆசியாவிற்குள் புகுந்து கிட்டைட்ஸ் (Kittites) களின் நிலத்தைக் கைப்பற்றினர். அதன்பிறகு ஆசியா மைனர் மலைப்பிரதேசங்களிலிருந்து, மெசெபடோ மியப் பள்ளத்தாக்குகளில் இறங்கி, அகிமப்பேரரசின் வள மிழந்த மக்களுக்குப் பெரும் அழிவை ஏற்படுத்தினர். இந் தப் படையெடுப்பைத் தடுப்பதற்காக நினிவா போர்வீரர் களுக்கு அழைப்புவிடுத்தது. களைப்படைந்த படை வடக்கு நோக்கிச் சென்றுகொண்டிருக்கும்பொழுது, உட னடியாக ஏற்பட்ட தடுக்கக்கூடிய அபாயத்தைப் பற்றிய செய்தி வந்தது. உர் (Ur) நாட்டின் தென்கிழக்குப் பாகத் தின் செழிப்பான பள்ளத்தாக்கில், செமிடிக் நாடோடி இனத்தைச் சேர்ந்த சால்டியன்ச் (Chaldeans) என்பவர் கள் நீண்டகாலமாக அமைதியாக வாழ்ந்து வந்தார்கள்.

திடீரென்று இவர்கள் போர்ப்பாதையில் நடைபோட ஆரம்பித்தனர். அசிரியன்ஸுக்கு எதிராகப் பிரச்சாரம் செய்தனர்; அண்டை, அயல் நாடுகளுடன் நேசமின்றி வாழ்ந்த அசிரியன்ஸ் நாட்டின் நாலா பக்கங்களிலும் எதிரிகள்; அதன் அழிவு அறுதியிடப்பட்ட தொன்றாக ஆகி விட்டது; நினிவா வீழ்ச்சியடைந்தது. அத்துடன் நூற்றாண்டுக் கணக்கில் கொள்ளையிடப்பட்ட பொருள்கள் அனைத்தும் உள்ளடக்கிய அழைப்பில்லா சேமிப்புக்கலமும் அழிக்கப்பட்டது. பெர்சிய வளைகுடாவிலிருந்து, நைல் நதிவரை ஒவ்வொரு கிராமத்திலும், குடிசையிலும் மகிழ்ச்சி பொங்கியது.

சில தலைமுறைக்குப் பிறகு கிரேக்கர்கள் யூப்ரடிஸ் நதிக்கரையைப் பார்வையிட்டு, மரம் செடிகளுடன் பரந்து கிடக்கும் பாழ்வெளி பற்றிக் கேட்டபொழுது, அவர்களுக்குப் பதில் சொல்ல யாருமே இல்லாதிருந்திருக்கக்கூடும்! கொடுங்கோலனை அரசனாகக் கொண்டு தங்களை மிகவும் கொடுமைப் படுத்திய ஒரு நகரம் இருந்ததாகவே மக்கள் ஞாபகத்தில் கொள்ள விரும்பவில்லை. தன் மக்களை நல்ல முறையில் ஆட்சி செய்து வந்த பாபிலோன் புத்துயிர் பெற்றது. அத்துடன் நீண்ட நாட்கள் ஆட்சிசெய்த நெபுச்சாட்நிசார் (Nebuchadnezzar) மன்னன் காலத்தில் பழைய கோயில்கள் எல்லாம் புதுப்பிக்கப்பட்டன. குறுகிய காலத்திற்குள் பரந்த அரண்மனைகள் பல எழுப்பப்பட்டன. பள்ளத்தாக்கு முழுவதும் புதிய கால்வாய்கள், நிலங்களுக்கு நீர் பாய்வதற்கு உதவியாக வெட்டப்பட்டன. சண்டையிட்டுவந்த அண்டை அயலார்கள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். எகிப்து ஒரு எல்லைப்புற மாகாணமாக ஆக்கப்பட்டது. யூதர்களின் தலைநகரான ஜெருசலம் அழிக்கப்பட்டது. மோசசின் புனிதப் புத்தகம் பாபிலோனுக்கு எடுத்துச் செல்லப்பட்டது. பால்ஸ்

தினத்தில் தங்கியிருக்கும் யூதர்களின் நன்னடத்தைக்கு அடகுப் பொருளாகப் பல யூதர்கள் பாபிலோனிய மன்ன னுடன் அவன் தலைநகருக்குச் சென்றனர்.

பண்டை உலகத்தின் ஏழு பெரும் அதிசயங்களில் ஒன்றாக பாபிலோன் ஆக்கப்பட்டது. யூப்ரடிஸ் நதிக்கரை களில் மரங்கள் நடப்பட்டன. நகரின் பல்வேறு சுவர்களி லும் (பூக்கள்) மலர்கள் வளர்க்கப்பட்டன. சில ஆண்டு களுக்குப் பிறகு பண்டை நகரின் கூரைகளிலிருந்து ஆயிரக்கணக்கான பூந்தோட்டங்கள் தொங்குவதுபோல் காட்சியளித்தது. தங்கள் தலை நகரை உலகின் காட்சி இடமாக ஆக்கிய பிறகு சால்டியர்கள் தங்கள் கவனத்தை மனம், ஆவி முதலியவற்றில் திருப்பினர். ஏனைய பாலை வன மக்களைப்போல், இரவு நேரத்தில் பாதையற்ற பாலை வனத்தில் தங்களுக்கு உதவி செய்யும் விண்மீன்கள் பற்றி அறிய அவாக்கொண்டனர். விண்ணுலக ஆராய்ச் சியில் இறங்கிப்பன்னிரண்டு ராசிகளுக்கும் பெயர் கொடுத் தனர். வானத்தில் படம் வரைந்தனர். முதல் ஐந்து நட்சத்திரங்களைக் கண்டுபிடித்தனர். அவைகளுக்குத் தங் கள் கடவுளர்களின் பெயரை வைத்தனர். உரோமானி யர்கள் மெசெபடோமியாவைக் கைப்பற்றியபிறகு இந்த சால்டியப் பெயர்களை லத்தீனில் மொழிபெயர்த்தனர். அதைத்தான் இன்று நாம் ஜூபிடர், வீனஸ், மார்ஸ், மெர்க்குரி, சாட்டர்ன் என்று அழைக்கிறோம். உலகின் குறுக்குக் கோட்டை (equator) முந்நூற்று அறுபது டிகிரி களாகவும், ஒரு நாளை இருபத்தி நான்குமணி நேரமாகவும், ஒரு மணியை அறுபது நிமிடங்களாகவும் பிரித்தனர். இன்றைய புத்துலக மனிதன் எவனும் இந்தப் பழைய பாபிலோனியக் கண்டுபிடிப்பில் மேலும் முன்னேற்றம் காணமுடியவில்லை. அவர்களிடம் கடிகாரம் இல்லை. சூரிய ஒளியின் நிழலைக் கொண்டு காலத்தை அளந்தனர்.

பத்து எண்ணிக்கை (decimal), பன்னிரண்டு எண்ணிக்கை (duodecimal) கணித முறையையும் கற்றுப் பயன்படுத்தினர். பன்னிரண்டு எண்ணிக்கை முறையினால் தான் அறுபது நிமிடங்கள், அறுபது செகண்டுகள், உண்டாயின. தற்காலத்தில் நமக்கு அதிகப் பழக்கத்திலும் பொதுவாகவும் இருக்கும் இருபத்தி நான்கு மணி, இரவையும் பகலையும் இருபது மணியாகவும், ஒரு மணியை ஐம்பது நிமிடங்களாகவும் நிமிடத்தை ஐம்பது செகண்டுகளாகவும் வரையறுக்கப்பட்ட பத்து எண்ணிக்கை முறையில் ஏற்படுத்தப்பட்டது.

ஓய்வுக்காக ஒழுங்கான ஒரு நாளின் தேவைபற்றி முதன் முதல் சிந்தித்ததும் சால்டியர்களே. வருடத்தை வாரங்களாகப் பிரிக்கும்பொழுது, ஆறு நாள் உழைப்பிற்குப் பின் ஒரு நாள் ஓய்வுக்கு வழி செய்து அந்த நாளை 'மன அமைதி' க்குப் பயன்படுத்தினர். இத்தகைய அறிவும், ஆற்றலும் கொண்ட இடம் எப்பொழுதும் நீடித்திருக்காமல் மறைந்தது வருந்தத்தக்கது. அறிவாற்றல் கொண்ட எண்ணற்ற மன்னர்களாலும்கூட மெசபடோமிய மக்களின் அழிவைத் தடுக்க முடியவில்லை.

செமிடிக் உலகம் தள்ளாத நிலையை அடைந்துகொண்டிருந்தது. உலகம் புதியதோர் மனித இனத்தை எதிர்நோக்கிக்கொண்டிருந்தது.

கிறித்துவுக்கு முன் ஐந்தாம் நூற்றுண்டில், இந்திய ஐரோப்பிய இனத்தைச் சேர்ந்த பெர்சியர்கள் என்ற வகுப்பினர், இரானின் உயர்ந்த மலைகளுக்கு இடையே உள்ள தங்கள் மேய்ச்சல் நிலங்களை விட்டுவிட்டு வளமுள்ள பள்ளத்தாக்கைக் கைப்பற்றினர். பாபிலோன் நகரம் எந்தவித எதிர்ப்புமின்றிப் பிடிபட்டது. நாட்டைக் காப்பாற்றுவதை விட்டுவிட்டு, மத விசாரத்தில் மூழ்கிக் கிடந்த

கடைசிப் பாபிலோனிய அரசன் நெபோனிடசும் (Neboni-
dus) ஓடி ஒழிந்தான். அவன் விட்டுச் சென்ற மகனும்
சில நாட்களுக்குப் பிறகு இறந்தான். பெர்சிய மன்னனுன
சைரஸ் (Cyrus), இறந்த அக்குழந்தையை அரச மரியாதை
களுடன் புதைத்தான். அதன் பிறகு, பாபிலோனிய அர
சர்களின் வாரிசாகத் தன்னைக் கவனித்தான். மெசபடோ
மியாவின் சுதந்திர ஆட்சி அத்துடன் முடிந்தது. பெர்சிய
மாகாணமாக ஆக்கப்பட்டுப் பெர்சியரால் ஆளப்பட்டு
வந்தது. பாபிலோனியாவில் மன்னர்கள் வசிப்பதில்லை
அதன் முக்கியத்வம் மங்கி ஒரு நாட்டுப்புறக்கிராமம் மாதிரி
ஆகிவிட்டது. கிறித்துவுக்கு முன் நான்காம் நூற்றுண்
டில் மற்றும் ஒரு புகழ் எய்தியது. கி. மு. 331-ல் பெர்
சியா, இந்தியா, எகிப்து இவற்றை யெல்லாம் வென்ற
இளம் கிரேக்கமன்னன் அலெக்சாந்தர் புனித ஞாபகச் சின்
னங்களைத் தாங்கிய பழம் பெரும் நகரைப் பார்வையிட்
டான். தானடைந்த புத்தம் புதிய வெற்றிகளுக்குப் பின்
னணியாக இந்த நகரத்தை வைக்க விரும்பினுன். அரண்
மனையைப் புதுப்பித்தான், கோவில்களைச் சுத்தம் செய்
தான். துரதிர்ஷ்டவசமாக அவன் நெபுசாட்நிசாரின்
விருந்து மண்டபத்தில் திடீரென்று மரணமடைந்தான்.
அதன் பிறகு பாபிலோனின் அழிவைத் தடுக்க ஒருவரா
லும் முடியவில்லை. அலெக்சாந்தரின் தளபதிகளில் ஒரு
வனுன செலுக்கஸ் நிக்கேட்டார் (Seleucus Nicator), யூப்ர
டிஸ்(Euphrates), டைகிரிச் (Tigris) நதிகளை ஒன்று சேர்க்
கும் பெரும் கால்வாயின் கரையில் ஒரு புதிய நகரைக்
கட்டத் திட்டமிட்டான். அதன் பிறகு பாபிலோன் கவனிப்
பாரற்றுக் கிடந்தது. கி. மு. 275-ம் ஆண்டு கல்வெட்டு
ஒன்றில் பாபிலோனியாவில் வசித்தவர்கள், தங்கள் இடத்
தைவிட்டு வலுவில் செலூசியா (Selucia) என்ற புதிய
நகரில் குடியேற்றப்பட்ட வரலாறு காணப்படுகிறது.

அதன் பிறகும், உண்மையான ஒரு சிலர், இன்று ஓநாய் களும் நரிகளும் வதியும் அந்தப் புனித நகரைச் சென்று கண்டு வந்தனர்.

காலங் கடந்து, களை யிழந்து; அரை குறையாக மறக் கப்பட்டு இருந்த அந்நகரைப் பெரும்பாலான மக்கள் தங்க ளுக்கு உபயோகமான வழியில் பயன்படுத்தினர். கட்ட டங்கள் கட்டுவதற்கான கல் எடுப்பதற்காக அந்நகரைப் பயன்படுத்தினர். ஏறத்தாழ முப்பது நூற்றாண்டுகள் வரை பாபிலோன் ஆத்மார்த்தத் துறையிலும், அறிவுத் துறையிலும் செமிடிக் உலகின் சிறந்த இடமாக விளங்கி யது. மக்களின் அறிவுத்திறனை வெளிப்படுத்தும் வகை யில் பாபிலோன், நூறு தலைமுறைக்குப் போற்றப்பட்டு வந்தது.

பண்டை உலகின் பாரி (Paris) சாகவும், லண்டன் (London) நியூயார்க் (New York) ஆகவும் பாபிலோன் திகழ்ந்தது. தற்பொழுது மூன்று பெரிய மண்மேடுகள், அவற்றின் கீழ் சிறந்த நகரம் சிதைந்த வரலாற்றை அடக் கிக்கொண்டு காட்சியளிக்கிறது. அங்கு, பரவிவரும் பாலை வனத்தின் மணல் பரந்து கிடக்கிறது.

# மோசசின் கதை

தொலை தூரத்திலுள்ள அடிவானத்தின் விளிம்பிற்கு மேல் ஒரு சிறு தூசிப்படலம் காணப்பட்டது. வளமான பூமியை அடுத்துள்ள தன் வரண்ட வயலில் வேலை செய்து கொண்டிருந்த பாபிலோனியக் குடியானவன் இதைப் பார்த்தான். "நம் நாட்டில் வேற்று இனத்தார், அவர்கள் அதிக தூரம் வரமுடியாது. அரசனின் சிப்பாய்கள் அவர்களை வெருட்டிவிடுவார்கள்" என்று, அவன் தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். அவன் ஊகித்தது உண்மைதான. எல்லைப்புறத்திலுள்ள காவலாளிகள் உறையிலிருந்து உருவிய கத்தியுடன் அவர்களை வரவேற்று, வேறிடத்திற்குச் செல்லும்படி வெருட்டினர்.

பாபிலோனின் எல்லைப்புறத்தை யொட்டி மேற்கு நோக்கி நகர்ந்தனர். கடைசியாக மத்தியதரைக் கடற்கரையை அடையும்வரை அங்கும் இங்கும் அலைந்து திரிந்தனர். ஊர் (Ur) பூமியில் வாழ்ந்த, தங்கள் பழங்குடி மக்களைப்போல், மந்தைகளை மேய்த்து வளர்த்து, எளிய வாழ்க்கையை நடத்தினர்.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு பருவமழை நின்று விட்டது. மனிதனுக்கும், அன்றி மிருகத்திற்கும் உணவுப் பொருள் ஏதும் கிடைக்கவில்லை, வேறு மேய்ச்சல் நிலங்களைத் தேடும் கட்டாயம் ஏற்பட்டது. இல்லை

யெனில் அங்கேயே மாய்ந்து மடியும் நிலை ஏற்படும்போல் இருந்தது. ஹீப்ருக்கள் (Hebrews.) என்றழைக்கப்பட்ட இந்த இடையர்கள் மறுபடியும் தங்கள் குடும்பத்துடன் புது இடம்தேடி, எகிப்துப்பூமிக்கு அருகேயுள்ள செங்கடற் கரையை அடைந்தனர். அவர்கள் பிரயாணத்தில் பசியும், தேவையும் அவர்களைப் பின்பற்றிச் சென்றன. பட்டினிச் சாவிலிருந்து தங்களைக் காப்பாற்றிக்கொள்ள, எகிப்து ஆட்சியாளர்களிடம் சென்று உணவுப் பிச்சை கேட்டு நின்றனர்.

நீண்ட நாட்களாகவே, பஞ்சத்தை எதிர்பார்த்திருந்தார்கள் எகிப்தியர்கள். பெரும் பெரும் சேமிப்புக் கலங்கள் கட்டி வைத்து, ஏழு ஆண்டுகளாக எஞ்சியிருந்த உணவுப் பொருள்களை அவற்றில் நிரப்பி வைத்திருந்தனர். இந்த உணவுப் பொருள்களை வந்தவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தனர். பணம் படைத்தோருக்கும், அஃது இல்லாதவர்களுக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்க உணவுப் பங்கீட்டு அதிகாரி ஒருவனை அமர்த்தினர். ஹீப்ரு இனத்தைச் சேர்ந்த இவன் பெயர் ஜோசப், சின்னவயதிலேயே தன் குடும்பத்தைவிட்டு ஓடிவந்துவிட்டவன். தகப்பனுக்கு ஜோசப் மீது பற்றுதல் அதிகம். அவன் சகோதரர்களுக்கு இதனால் பொறாமை. அவர்களின் கோபத்திற்கு அஞ்சி அவன் ஓடிவந்துவிட்டான். உண்மை எதுவோ, ஜோசப் எகிப்துக்கு வந்தான். எகிப்தை அப்போது கைப்பற்றிய ஹைக்ஸாஸ் மன்னர்கள் (Hyksos Kings) ஜோசப்பிற்கு ஆதரவளித்து, தாங்கள் புதிதாகக் கைப்பற்றிய இடத்தை ஆட்சி செய்வதில் அவன் ஒத்துழைப்பையும் பெற்றனர்.

பசியோடிருந்த ஹீப்ருக்கள் ஜோசப் முன்னிலையில் உதவி கேட்டு நின்றபொழுது, தன் உறவினர்கள் என்ப

தைப் புரிந்துகொண்டான். பரந்த நோக்கும், விரிந்த உள்ளமும் கொண்டவன் ஜோசப். குள்ளப் புத்தியும் குறுகிய நோக்கும் அவன் அறியாத ஒன்று. தனக்குத் தீங்கிழைத்தவர்களைப் பழிவாங்கவில்லை, அவன். அவர்களுக்கு உணவளித்து, எகிப்திலேயே தங்குவதற்கு இடமும் அளித்தான். தங்கள் குடும்பம், குழந்தைகள், மந்தை இவற்றுடன் மகிழ்ச்சியாக இருந்தனர்.

பல ஆண்டுகளாக ஹீப்ருக்கள், (யூதர்கள் என்று இவர்கள் பொதுவாகக் குறிக்கப்பட்டனர்). தாங்கள் குடியேறிய நாட்டின் கிழக்குப் பாகத்தில் அமைதியாக வாழ்ந்தனர்.

அதன் பிறகு ஒரு பெரும் மாறுதல் ஏற்பட்டது.

திடீரென்று ஏற்பட்ட ஒரு குழப்பத்தின் காரணமாக ஹைக்சாஸ் மன்னர்கள் அரசிழந்து, முடியிழந்து, நாட்டையும் இழந்து வெளியேறினர். மறுமுறையும் எகிப்தியர்களே தங்கள் வீட்டின் ஆண்டையாக மாறினர். வேற்று நாட்டவர்களை அவர்கள் ஒருபொழுதும் அதிகமாக விரும்பியதில்லை. அராபிய இடைக் கூட்டத்தின் கீழ் முந்நூறு ஆண்டுகள் சிக்கிச் சீரழிந்ததின் விளைவாக, வேற்றுநாட்டவர்களையும், அவர்களைச் சார்ந்தவைகளையும் வெறுத்தொதுக்கும் உணர்ச்சி எகிப்தில் அதிகமாகியது.

ஹீப்ருக்கள், தங்கள் இனம், இரத்தம் இவற்றால் உறவினர்களான ஹைக்சாஸ்களுடன் நட்பு முறையில் பழகினர். எகிப்தியர்கள் முன்னிலையில் ஹீப்ருக்கள் காட்டிக் கொடுப்பவர்களாகத் தோன்றியதற்கு இதுவொன்றே போதுமானதாக இருந்தது.

தன் மக்களைக் காப்பாற்றும் வரையில் ஜோசப் உயிரோடிருக்கவில்லை, ஒரு சிறு போராட்டத்திற்குப் பிறகு ஹீப்ருக்கள் அவர்களின் வீடுகளில் இருந்து வெளியேற்றப்

பட்டு, நாட்டின் மத்திய பாகத்திற்கு விரட்டப்பட்டு, அங்கே அடிமைகள்போல் நடத்தப்பட்டனர்.

ஏவலாட்களாகவும், பிரமிட்கள் கட்டுவதற்குக் கல் சுமப்பவர்களாகவும், கட்டடங்கள் கட்டும் செங்கல் செய்பவர்களாகவும், சாலைகள் அமைப்பவர்களாகவும், நெடுந் தொலைவிலுள்ள எகிப்திய நிலங்களுக்கு நைல் நதித் தண்ணீரைப் பாய்ச்சும் கால்வாய்கள் வெட்டுபவர்களாகவும் அநேக ஆண்டுகள் உழைத்தனர். எல்லையில்லாத தொல்லைக்காளானாலும், அவர்கள் தைரியத்தைக் கைவிடவில்லை. அவர்களுக்கு எதிர்பார்த்த உதவி கிட்டும் சந்தர்ப்பமும் நெருங்கியது.

மோசஸ் (Moses) என்ற இளைஞன் ஒருவன் வசித்து வந்தான். அவன் அறிவுத்திறம் அதிகம் படைத்திருந்தான். பாரோவிடம் வேலைக்கு அமர்த்தும் நோக்கத்துடன் எகிப்தியர்கள் அவனுக்கு நல்ல கல்வி போதித்து வந்தனர். அவன் கோபத்தைக் கிளரும் அளவுக்கு ஏதாவது நடக்காமல் இருந்திருந்தால், ஒரு மாகாணத்தின் கவர்னராகவோ, அல்லது எல்லைப்புற மாவட்டங்களில் வரிவசூலிப்பவராகவோ மோசஸ் தன்னுடைய அந்திய காலத்தை அமைதியாகக் கழித்திருக்கக்கூடும்.

ஏற்கனவே கூறியபடி, நடை, நொடி பாவனைகளில் தங்களைப்போல் இல்லாதவர்களை, வேற்று இனத்தார் என்று எகிப்தியர்கள் இழித்தும், பழித்தும் ஏளனம் செய்தனர், வெளி நாட்டவர்கள் எண்ணிக்கையில் குறைந்த 'மைனரிட்டி'களாக இருந்ததால், தங்களைக் காப்பாற்றிக் கொள்ள முடியவில்லை. மேலும், தங்கள் குறைகளை நீதி மன்றத்திற்கு எடுத்துச் செல்வதும் நன்மை பயப்பதில்லை. ஏன் எனில், எகிப்தியக் கடவுள்களை வணங்காதவர்களும், அந்நிய மொழியில் தங்கள்

வழக்கை நடத்துபர்களும் ஆன, வெளிநாட்டவர்களின் குறைகளைப் போக்க எகிப்திய நீதிபதிகள் முயல்வதில்லை.

ஒருநாள் மோஸஸ் தன்னுடைய எகிப்திய நண்பர்களுடன் உலாவச் சென்றான். நண்பன் ஒருவன், யூதர்களைப்பற்றி ஒவ்வாத சிலவற்றைச் சொல்லி அவர்களை அடிக்கப் போவதாகவும் கூறினான். இதைக் கேட்கச் சகிக்காத மோசஸ் அவனைத் தாக்கினான். அடி சற்று பலமாக இருக்கவே எகிப்திய இளைஞன் இறந்துவிட்டான்.

எகிப்தியர்களைக் கொல்வது என்பது மற்றவர்க்ளால் கனவிலும் கருத முடியாத பயங்கரச் செயலாக இருந்தது. மேலும் எகிப்தியச் சட்டம், பாபிலோனிய மன்னன் ஹம்முராபி (Hammurabi) வகுத்தது போன்ற அறிவுத் தெளிவு வாய்ந்த சட்டம் அல்ல. ஹம்முராபியின் சட்டத்தில் திட்டமிட்டுச் செய்யப்பட்டகொலை, அறிவை அகற்றி ஆத்திரத்தை மூட்டும் பிறருடைய ஏக்க இழி பேச்சு இவற்றின் விளைவான கொலை இவை யிரண்டும் பற்றிய பாகுபாடு இருந்தது.

மோசஸ் ஓடி ஒளிந்தான்; தன் மூதாதையர்களின் இடத்திற்குத் தப்பியோடினான். மத்திய பாலைவனம்; செங்கடற்கரையின் கீழ்க்கரை ; எத்தனையோ நூற்றுண்டுகளுக்குமுன் தன் இனத்தவர்கள் ஆடுகளை மேய்த்த இடம்; ஜெத்தோரா (Jethoro) பாதிரியார் அன்பு உள்ளங் கொண்டவர்; அவனை வரவேற்று உபசரித்து, தன் ஏழு பெண்களில் ஒருவளான சிப்போரா (Zipporah)என்பவளையும் அவனுக்கு மணம் செய்வித்தார். நீண்ட நாட்கள் அங்கு வாழ்ந்தான் மோசஸ்; எத்தனையோ பொருள்களைப்பற்றிச் சிந்தித்தான். பாரோவின் அரண்மனையிலிருந்து அந்தஸ்து, வசதி முதலியவைகளைத் துறந்து பாலை

வனப் பாதிரியின் கடின உழைப்பையும், பெரிய வாழ்க்கை யையும் பகிர்ந்து கொண்டான்.

பழங்காலத்தில், யூதர்கள் எகிப்தில் நுழைவதற்கு முன்பு, அவர்களும் அரேபியாவின் பரந்த வெளிகளில் நாடோடிகளாக அலைந்து திரிந்தவர்கள்தான். அவர்கள் கூடாரங்களில் வசித்தனர்; எளிய உணவையே உண்டனர்; நேர்மையான மனிதர்களாகவும், நம்பிக்கையுள்ள பெண் களாகவும் இருந்தனர். கிடைத்ததைக் கொண்டு நிறை வுடன் வாழ்ந்தனர். கள்ளமில்லா உள்ளத்தினுல் அவர்கள் பெருமை கொண்டிருந்தனர். எகிப்திய நாகரீகத்தைக் கண்ட பிறகு இந்த முறை மாறியது. சுகத்தை விரும்பும் எகிப்தியர்களின் வழியைப் பின்பற்றினர். வேறு இனத் தவர்கள் தங்கள்மேல் ஆதிக்கம் செலுத்துவதைத் தடுக்க வில்லை. தங்கள் சுதந்திரத்தைக் காப்பாற்றப் போரிடவும் இல்லை; ஓயாது வீசும் காற்றுல் அலைபோல் எழும் மணல் நிறைந்த பாலைவனத்துப் பழைய கடவுள்களைக் கைவிட்டு, இருளடர்ந்த எகிப்துக் கோயில்களில் உள்ள ஒளிபொருந் திய கடவுளர்களை வணங்கினுர்கள்.

இந்தப் புது மாறுதலிலிருந்து அவர்களைத் திருப்பி, பழைய நாட்களின்உண்மையான, எளிமையான கொள்கை களுக்குக் கொண்டுவருவது தன் கடமை என மோசஸ் உணர்ந்தான். அடிமைகளாக வாழும் அந்த நாட்டை விட்டு விலகித் தன்னுடன் பாலைவனத்தில் வந்து வாழும் படி தன் உறவினர்களுக்குச் செய்தி அனுப்பினுன். இதைக் கேள்வியுற்ற எகிப்தியர்கள், இதற்குமுன் இருந்த தைவிட அதிகமான அளவு யூதர்களைத் தப்பிவிடாதபடி காத்துவந்தனர். மோசஸின் திட்டங்கள் தோல்வியடைந் ததுபோல் தோன்றியபொழுது, திடீரென்று நைல் பள்ளத் தாக்கில் கொடிய வியாதி ஒன்று உண்டானது. பாலை வனத்தில் பல கஷ்டங்களுக்கு ஆளாகிப் பழக்கப்பட்டவர் கள் யூதர்கள். மேலும் உடல்நல சம்பந்தமான சில முக்கிய

குறிப்புக்களைக் கைக்கொண்டு வாழ்ந்தனர். ஆதலால், நோயால் ஆயிரக்கணக்கில் மடிந்த பலமற்ற எகிப்தியர் களைப் போலன்றி யூதர்கள் நோயின் கொடுமைக்கு ஆளா காமல் தப்பித்தனர். அமைதியான இச்சாவினுல் ஏற் பட்ட வேதனைக்கும் குழப்பத்திற்கும் நடுவில் தங்கள் மூட்டை முடிச்சுகளுடன் யூதர்கள் கிளம்பிவிட்டனர். வாக் குறுதிகளை அதிக அளவில் கொடுத்து, அதை அறை குறையாகக் கூட நிறைவேற்ற முடியாத அந்த நாட்டி லிருந்து, அவர்கள் வெளியேறினர். யூதர் வெளியேறிய தைக் கேள்விப்பட்டதும் எகிப்தியர்கள் தங்கள் சிப்பாய் களுடன் அவர்களைப் பின்தொடர்ந்தனர். ஆனுல், சிப் பாய்கள் அழிந்து போயினர்; யூதர்கள் தப்பியோடினர்.

அடிமைத்தளை அறுந்து சுதந்திரமாக இருந்தனர்; பத்திரமாக வந்து சேர்ந்தனர். கிழக்கில் விரிந்த வெளி யில் நடந்தார்கள். பாபிலோனின் கடவுள் சந்திரன்; அதன் பெயர் சின் ( Sin ); சினுய் மலை ( mount sinai ) என்று அழைக்கப்பட்ட மலையடிவாரத்தில் இருந்த பரந்த வெளிக்கு வந்தனர். அங்கு, மோசஸ் தன் இனத்திற்குத் தலைமை வகித்து, சீர்திருத்தம் செய்ய ஆரம்பித்தான்.

அந்த நாட்களில் மற்ற மக்களைப் போலவே யூதர் களும் அநேக கடவுள்களை வணங்கி வந்தனர். எகிப்தில் அவர்கள் வாழ்ந்த காலத்தில் எகிப்தியர்கள் அருமையாக வளர்த்துப் போற்றிய மிருகங்களிடம் கூட மரியாதை செலுத்தி, அவைகளின் நலனுக்காகப் புனித ஆலயங் களைக் கட்டினர். மணற் குன்றுகள் நிறைந்த தீபகற்பத் தில், உயர்ந்த வான வெளியில் தன்னுட்சி செலுத்தும் இடி, புயல் இவற்றுடன் தனிவாழ்வு நடாத்திய மோசஸ், பாலைவனத்தில் அலைந்து திரிபவர்களுக்கு வாழ்வும், ஒளி யும், உயிரும் ஊட்டிவரும் அவற்றையே வழிபட்டு வந்தான்.

ஜெகோவா (Jehovah) என்ற பெயர்பூண்ட இந்த மாபெரும் சக்தி, மேற்கு ஆசியாவைச் சேர்ந்த செமிடிக் இனமக்களால் மிகவும் பயபக்தியுடன் வழிபடப்பட்டது. மோசேசின் உபந்நியாசம் மூலமாக, யூதர்களின் ஒரே கடவுளாக ஜெகோவா இருந்தது.

ஒருநாள், மோசஸ் யூதர்களின் கூட்டத்திலிருந்து மறைந்துவிட்டான். தன்னுடன் கரடுமுரடான இரண்டு கற்களையும் எடுத்துச் சென்றான். சினய் மலையின் சிகரத்தில் நிலவும் அமைதியைக் காண அவன் சென்றுவிட்டதாக மக்கள் பேசிக்கொண்டனர். அன்று பிற்பகல், மலை உச்சியை ஒருவராலும் பார்க்க முடியவில்லை. பயங்கரப் புயலினால் எழுப்பப்பட்ட இருட்டில் மலைஉச்சி மனிதர்களின் கண்களுக்குத் தெரியாதபடி மறைந்தது.

ஆனால் மோசஸ் திரும்பியதும்.........ஆம்! இடிக்கும், கண்ணைப் பறிக்கும் மின்னலுக்கும் இடையில் ஜெகோவா பேசிய பேச்சுக்கள் மோசஸ் எடுத்துச் சென்ற இரண்டு கற்களில் எழுதப்பட்டிருந்தன. அந்த நிமிடத்திலிருந்து மோசஸின் செய்கையை ஏன் என்று கேட்க எல்லா யூதர்களும் அஞ்சினர்.

நாடோடி வாழ்க்கையையே தொடர்ந்து நடத்தும்படி ஜெகோவா கட்டளையிட்டதாக மோசஸ் சொன்னதும், யூதர்கள் ஆர்வத்துடன் அடிபணிந்தனர்.

பாலைவனத்தில் பாதைகளின்றி இருந்த குன்றுகளின் நடுவே அநேக ஆண்டுகள் அவர்கள் வசித்தனர். எத்தனையோ தொல்லைகளுக்கு ஆளாகி அவதிப்பட்டனர். உணவு, தண்ணீர் இவைகளின்றி வாடினர். ஜெகோவாவின் உண்மையான பக்தர்களான அவர்களுக்கு நிரந்தர வாழ்வளிக்கும் 'புண்ணிய பூமி' பற்றிய அவர்கள் நம்பிக்கையை வளர்த்து வந்தான் மோசஸ்.

கடைசியாக, நல்ல வளமான பிரதேசத்தை அடைத்தனர். ஜெகோவாவின் புனிதக் கோட்பாடுகளடங்கிய கற்களைத் தாங்கிக் கொண்டு, ஜோர்டான் (Jordan) நதியைக் கடந்து சென்றனர். டானி (Dan)லிருந்து பீர்ஷிபா (Beersheba) வரை விரிந்து கிடந்த மேய்ச்சல் நிலங்களில் தங்குவதற்குத் தங்களைத் தயார் செய்துகொண்டனர்.

இனி மோசஸ் அவர்களின் தலைவன் அல்ல. மிகவும் மூப்படைந்து விட்டபின் களைப்பு மிகுதியாக இருந்தது அவனுக்கு. தங்களுக்கு என யூதர்கள் ஒரு தாய் நாட்டைக் காண இருக்கும் பாலஸ்தீன மலைகளின் தொலைவிலுள்ள சரிவுகளைக்காண அவனை அநுமதித்துவிட்டார்கள்.

அறிவு ஒளி வீசும் அவன் கண்கள் என்றென்றும் மூடிவிட்டன. இளமைக் காலத்தில் அவன் நினைத்த காரியத்தை முடித்துவிட்டான். அந்நிய ஆதிக்கத்தின் கீழ் அடிமைப்பட்டிருந்த தன் மக்களை விடுவித்து சுதந்திர வாழ்வின் உரிமையைப் பெற்றுத்தந்தான். அவர்களை ஒன்று சேர்த்து, ஒரே கடவுளை வழிபடும் நாடுகளில் முதன்மையானதாக இருக்கும்படி செய்தான்.

# ஜெருசலம் - சட்டத்தின் நகர்

## சட்டத்தின் பிறப்பிடம்

மத்தியதரைக் கடலுக்கும், சிரியன் மலைகளுக்கும் இடையே உள்ள ஒரு சிறு நிலப்பிரதேசம்தான் பாலத்தீனம். நெடுங்காலமாக அங்கு மக்கள் வசித்துவந்தனர். கானனைட்சு (Ganoanites) என்ற பெயர்தான் அங்கு வாழ்ந்த ஆதிவாசிகளுக்குக் கொடுக்கப்பட் டிருக்கிறது. ஆனால், இவர்களைப்பற்றி நமக்கு அதிகம் தெரியாது. இந்த ஆதிவாசிகள் செமிடிக் இனத்தைச் சேர்ந்தவர்கள். யூதர்கள், பாபிலோனியர்களைப் போல, இவர்களின் முன்னோர்களும் பாலைவன மக்களாகவே இருந்தனர். ஆனால், யூதர்கள் பாலத்தீனத்தில் நுழைந்த சமயம், கானனைட்சுகள் கிராமங்களிலும், நகரங்களிலும் வசித்து வந்தனர். ஆடு மேய்த்துவந்த அவர்கள் வணிகர்களாக ஆகிவிட்டனர். யூதர்கள் மொழியில் கானனைட், வணிகர் என்ற இரண்டும் ஒரு பொருளையே குறிக்கின்றன.

சுற்றிலும் உயர்ந்த சுவர்கள் எழுப்பித் தங்களுக்கு என நல்ல நகரங்களைக் கட்டிக்கொண்டனர். யூதர்களைத் தங்கள் நகருக்குள் வராமல் தடுத்து, பள்ளத்தாக்குகளின் பரந்த புல்வெளிகளில் அவர்கள் வீடுகளை அமைத்துக் கொள்ளும்படி செய்தனர். கொஞ்ச காலத்திற்குப் பிறகு யூதர்களும், கானனைட்சுகளும் நண்பர்களாயினர். இரு

வரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்களாக இருந்ததால் நட்பு ஏற்பட வசதியாக இருந்தது. மேலும், பிலிஸ்டைன்ஸ் (Philisdines) என்ற வேற்றுஇனத்தைச் சேர்ந்த அந்நியன் எதிரியாக இருந்ததால், அவனை முறியடிக்கத் தாங்கள் ஒன்று சேரவேண்டிய அவசியத்தையும் உணர்ந்தனர்.

பிலிஸ்டைன்சுகளுக்கு ஆசியாவில் சொந்தம் ஒன்றும் இல்லை. அவர்கள் ஐரோப்பியர்கள்; அவர்களின் சொந்த இடம் கிரீட்தீவு (Crete). இந்திய—ஐரோப்பியர்களால் தங்கள் இடத்திலிருந்து விரட்டப்பட்ட அவர்கள் மத்தியதரைக் கடற்கரைப் பகுதிகளில் தங்கினர். இந்தக் காலம் எப்பொழுது என்பது சரிவரத் தெரியவில்லை. இவர்களைப் புராசதி (Purasati) என்று அழைத்த எகிப்தியர்கள்கூடப் பிலிச்டைன்சுகளைக் கண்டு பயந்தனர். இவர்கள் இறகுகளால் ஆன தலைமுடியை அணிந்திருந்தனர். இவர்கள் போரிடச் சென்ருல், மேற்கு ஆசியாவிலுள்ள மக்கள் எல்லையைக் காக்கத் தங்கள் பெரும் படைகளை அனுப்பினர். பிலிச்டைன்சுகளுக்கும் யூதர்களுக்கும் இடையே நடந்த போர் ஒரு முடிவுக்கும் வராமல் தொடர்ந்து நடந்தது. டேவிட் கோலியத்தைக் கொன்ற போதிலும், சாம்சன் பிலிச்டைன்சுகளையும் அவர்கள் உதவியாளர்களையும், டாகன் என்ற கோபுரத்திற்கு அடியில் புதைத்தபோதிலும், பிலிச்டைன்சுகள் கடைசி வரை யூதர்களுக்குக் குறைந்தவர்களாகவே இல்லை. மத்தியதரைக்கடலில் உள்ள துறைமுகங்களை ஹிப்ருக்கள், கைப்பற்ற அவர்கள் ஒருபொழுதும் அனுமதித்ததில்லை. ஆகையால், யூதர்கள் பாலத்தீனத்தின் கிழக்குப் பகுதியில் உள்ள பள்ளத்தாக்குடன் திருப்தியடைய வேண்டியிருந்தது. அந்த மலைக்குன்றுகளின் உச்சியில் அவர்கள் தங்கள் தலைநகரை நிறுவினுர்கள். இதன் பெயர் ஜெருசலம். முப்பது நூற்ருண்டுகள் வரை மேற்கத்திய

உலகின் புனித இடமாக அது விளங்கியது. நமக்கு எது வும் தெரியாத இறந்த காலத்தின் இருண்ட நாட்களில் அமைதியின் இருப்பிடமாக விளங்கிய ஜெருசலம், எகிப் தியர்களால் பாலத்தீன மலையை ஒட்டி எல்லைப்புறப் பாதுகாப்புக்காகக் கட்டப்பட்ட பல கோட்டைகள், அரண் மனைகள் இவற்றில் ஒன்ருக இருந்தது. எகிப்திய மன் னர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு, செபுசைட்ஸ் (Jebusites) எனப்படும் பண்டைய இனத்தைச் சேர்ந்தவர்கள் பாழடைந்த நகரங்களுக்கு வந்தனர். இவர்களுக்குப் பிறகு வந்த யூதர்கள் பெரும் சண்டைக்குப் பிறகு நகரைக் கைப்பற்றித் தங்கள் மன்னன் டேவிட்டின் இருப்பிடமாக ஆக்கினர்கள்.

அநேக ஆண்டுகள் அங்குமிங்கும் அலைந்து திரிந்த பிறகு சட்டத்தின் முதல்வர்கள் நீண்டதொரு மௌனத் தில் ஆழ்ந்தனர். அறிஞன் சாலமன் அவர்களுக்குப் பெரியதொரு வீடு அமைக்க முடிவு செய்தான். கிடைத் தற்கரிய மரம், விலையுயர்ந்த உலோகங்கள் இவைகளுக் காக, சாலமனின் தூதுவர்கள் உலகெங்கும் தேடி அலைந் தனர். நாடு முழுவதும் இறைவனின் வீட்டை அலங் கரிப்பதற்குத் தன் செல்வத்தை வாரி இறைத்தது. ஜெஹோவாவின் புனிதச் சட்டம் ஆண்டுக்கணக்கில் பாதுகாக்கப் படுவதற்காகத், திருக்கோயிலின் சுவர்கள் மிகவும் உயரமாக எழுப்பப்பட்டன. ஆனல், இந்தப் பாதுகாப்பு அதிகநாள் நீடிக்கவில்லை. அண்டை, அய லில் உள்ள எதிரி நாடுகளுடன் அடிக்கடி தலையிட்ட தாலும், நாற்புறமும் எதிரிகளால் சூழப்பட்டு, பிலிச் டைன்ஸ்களால் அடிமைப் படுத்தப்பட்டதாலும், யூதர்கள் நீண்டநாட்கள் தங்கள் சுதந்திரத்தைக் காப்பாற்ற முடிய வில்லை.

உள்நாட்டுப் பூசல்கள் மலிந்திருந்ததால், வீராவேசத்துடன் சண்டையிட்டும் எதிரிகளிடம் தோற்றுப் போயினர். அசிரியர்கள், எகிப்தியர்க்ள், சால்டியர்கள் இவர்களுக்குப் பிறகு, பாபிலோனிய மன்னன் நெபுசாட்நிசார் (Nebuchadnezzar) கிறுத்து பிறப்பதற்குமுன் 586–ஆம் ஆண்டில் ஜெரூசலத்தைக் கைப்பற்றி, நகரையும், ஆலயத்தையும் அழித்து எரித்துவிட்டான்.

அழிந்த நகரைப் புதுப்பிக்க ஆரம்பித்தனர் யூதர்கள். ஆனால், சாலமனின் பொன்னான உதவி கிடைக்கவில்லை. சுதந்திரமிழந்து அந்நிய இனத்தவர்களின் அடிமைகளாக வாழ்ந்தனர். பணம் கிடைப்பதும் அரிதாயிருந்தது: அழகான பழம்பெரும் கட்டிடத்தைக் கட்ட எழுபது ஆண்டுகள் ஆயின. அது முந்நூறு ஆண்டுகள் வரை பத்திரமாக இருந்தது. இரண்டாவதாக நடந்த அந்நியப் படையெடுப்பினால் கொழுத்தப்பட்டது; தீ பாலத்தீனத்தில் வான்முட்டக் கொழுந்துவிட்டு எரிந்தது. மூன்றும் முறையாகக் கட்டப்பட்டபொழுது, குறுகிய பாதைகளையுடைய இரண்டு உயர்ந்த மதிற்சுவர்களும், பல்வேறு உட்புறப் பாதுகாப்புக்களும் செய்து எதிர்காலத்தில் திடீர் படையெடுப்பு ஏற்படாதபடி செய்யப்பட்டது.

ஜெருசலத்தைத் துன்பம் தொடர்ந்து வந்தது.

கிறித்து பிறப்பதற்கு அறுபத்தி ஐந்து ஆண்டுகளுக்குமுன், உரோமானியர்கள், பாம்பே என்ற தங்கள் தலைவனின்கீழ் யூதர்களின் தலைநகரைப் பிடித்துக் கொண்டார்கள். இருள் அடர்ந்த குறுகிய பாதைகளையும், நலக்கேடு பயக்கும் சிறுசிறு பாதைகளையும்கொண்ட பழைய நகரத்தை, பழங்குப்பை என மதித்து அழித்துவிட்டனர். புதுக்கட்டடங்கள், மாடிவீடுகள், குளிக்கும் குளங்கள், விளையாட்டு மைதானங்கள் முதலியவைகளை

அவர்கள் அமைத்தனர். விருப்பமில்லாத மக்களின் மீது தங்களுடைய புதிய முறைகளைத் திணித்தனர்.

நடை முறைக்குப் பயன் தராது என்று உரோமானியர்கள் கருதிய யூதக் கோவில்கள், யூதர்களின் மன்னனான ஹீராத் (Herod) காலம்வரை கவனிப்பாரற்று இருந்தது. உரோமானியர்களின் உதவி பெற்ற ஹீராத் கடந்து சென்ற நாட்களின் பழம்பெருமையைப் புதுப்பிக்க எண்ணம் கொண்டான். தங்களால் தேர்ந்தெடுக்கப் படாமல் தலைவனாக வந்தவனின் கட்டளைக் கிணங்கி அடிமைகளாக்கப்பட்டவர்கள் அரை மனத்துடன் வேலை செய்தனர்.

கட்டடத்தின் கடைசிக் கல் வைப்பதற்கு முன்பே, இரக்கமற்ற உரோமானிய வரிவசூலிப்பவர்களை எதிர்த்துப் புரட்சி கிளம்பியது. புரட்சிக்காரர்களுக்கு முதல் பழியாக ஆனது கோவில். யூதர்களின் நம்பிக்கையும், பக்தியும் குடிகொண்டிருந்த அந்தக் கோயில் டைட்டஸ் (Titus) பேரரசனின் படைவீரர்களால் தீக்கிரையாக்கப் பட்டது. ஆனால், ஜெருசல நகர் மாத்திரம் விட்டுவைக்கப்பட்டது.

பாலத்தீனம் தொடர்ந்து அமைதியின்றித் தவித்தது.

உரோமானியர்களுக்கு எல்லா இனத்தவர்களைப் பற்றியும் தெரியும். அவர்கள் ஆட்சியின்கீழ் பல்வேறு தெய்வங்களை வழிபடுபவர்கள் வாழ்ந்தனர். இருந்த போதிலும் யூதர்களை எப்படி நடத்துவது என்று அவர்களுக்குப் புரியவில்லை. யூதர்களின் குணத்தை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. அலட்சியத்தின் அடிப்படையில் எழுந்த முழு சகிப்புத் தன்மையை அஸ்திவாரமாகக்

கொண்டுதான் மிகப்பரந்து, சிறந்திருந்த உரோமானிய ஆட்சி கட்டப்பட்டிருந்தது. குடிமக்களின் மதநம்பிக்கை களிலும், கொள்கைகளிலும் உரோமானிய அதிகாரிகள் தலையிடுவதில்லை. உரோம சாம்ராஜ்யத்து மக்கள் தங்கள் கோயில்களில் உரோம அரசனது படம் அல்லது சிலை ஒன்றை வைக்கும்படி கேட்டனர். இது ஒரு வழக்கமாக இருந்ததே தவிரக் கட்டாயம் எதுவும் இல்லை. யூதர் களுக்கு இது பிடிக்கவில்லை. புனிதத் தன்மைக்கு எதி ராகத் தங்கள் கோயில்களில் உரோம மன்னனின் படத் தையோ, சிலையையோ வைப்பது புனிதத்தன்மைக்கு இழுக்கு என நினைத்தனர்; அதனால், மறுத்தனர். ஆனால், உரோமர்கள் க்ட்டாயப் படுத்தினர். மிகச்சாதா ரணமான இந்தச் சம்பவத்தினால் ஏற்பட்ட மாறுபட்ட எண்ணங்கள் வளர்ந்து பகை முற்றுவதற்குக் காரணமாக இருந்தது. டைட்டஸ் (Titus) பேரரசரின்கீழ் நடந்த புரட் சிக்கு ஐம்பத்திரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, யூதர்கள் மறுபடியும் கலகம் விளைவித்தனர். இம்முறை எல்லா வற்றையும் அழித்துவிடுவது என உரோமர்கள் தீர் மானித்தனர். ஜெருசலம் அழிக்கப்பட்டது. கோயில் கொழுத்தப்பட்டது. சாலமன் தோற்றுவித்த பாழடைந்த நகரின் மீது ஏலியா காபிடோலினா (Aelia Capitolina) என்ற புதிய நகரம் எழுந்தது. அங்கு ஜூபிடர் (Jupiter) தேவனுக்கு யூதக் கோயில் ஒன்று கட்டப்பட்டது. ஏறத் தாழ ஆயிரம் ஆண்டுகள் வரை ஜெஹோவா (Jehovah)வை வணங்கி வந்தவர் தலைநகரில் இருந்து தாம் வெளியேற்றப்பட்டனர், யூத முன்னோர்கள் வாழ்ந்த இடத்திலிருந்து ஆயிரக் கணக்கில் விரட்டப்பட் டனர். அன்றிலிருந்து இன்றுவரை உலகில் சொந்த நாடின்றி நாடோடியாகத் திரிகின்றனர். அவர்களுடைய சட்டங்கள் அரண்மனையிலும், கோயில் சுவர்களுக்கு

இடையிலும் அடைத்து வைக்கப்படவில்லை. ஜூடாக் (Judah) களின் சின்னஞ் சிறு நாட்டிலிருந்து விரிந்து பரவியிருக்கிறது அவர்களின் நாகரீகம். உண்மையான மக்கள் நேர்மையான வாழ்வு நடத்தும் இடங்களில் எல்லாம், யூதர்கள் நியாயத்தின் சின்னமாக நிலைத்திருக்கின்றனர்.

# டமாஸ்கஸ் (Damascus)

## வாணிப நகர்

எகிப்தின் நகரங்கள் எல்லாம் பூமியிலிருந்து மறைந்து விட்டன. நினேவா (Nineveh), பாபிலோன் (Babylon) ஆகிய நகரங்கள் செங்கல்லும் மண்ணுமாக இடிந்து பாலைவனம்போல் காட்சி யளித்தன. ஜெரூசலத்தின் புராதனக் கோயில், மங்கி மறைந்த பெருமைக்கு அடியில் புதையுண்டு கிடந்தது.

ஒரே ஒரு நகரம் மட்டும் காலத்தை கடந்து நின்றது

அதுதான் டெமாஸ்கஸ். இதன் நாற்புற வாயில்கள், உறுதியான மதிற்சுவர்கள் இவற்றிற்கு இடையே மிகச் சுறுசுறுப்பான அந்த மக்கள் ஐயாயிரம் ஆண்டுகள் வரை வாழ்ந்தனர். 'நேர்மையான வழி' தெரு (Street called Straight) என்றழைக்கப்படுவதுதான் நகரத்தின் முக்கியமான வாணிபம் நடக்கும் இடம். இந்த இடம் நூற்றுஐம்பது சந்ததிகளைச் சந்தித்திருக்கிறது.

அமோரைட்சுகளின் (Amorites) பாதுகாக்கப்பட்ட எல்லைப்புற நகராக அது இருந்தது. புகழ் வாய்ந்த இந்தப் பாலைவன மக்கள்தான் ஹமுராபி அரசனுக்கு (King Hammurabi) முன்னோர்கள். அமோரைட்சுகள் கிழக்கில் மெசெபடோமியப் பள்ளத்தாக்கில் பாபிலோனிய

அரசாட்சியை நிறுவியபொழுதும், டெமாஸ்கஸ் நகர் செழிப்புடன் இருந்தது. இம்மக்கள் ஆசியா மைனரின் மலைப்பகுதிகளில் வாழும் ஹிட்டைட்ஸ் (Hittites) என்ற முரட்டு இனத்தவர்களுடன் வாணிபம் நடத்தி வந்தனர்.

காலக்கிரமத்தில் இந்த ஆதி வாசிகள் ஆர்மேயன்ஸ் (Armaeans) எனப்படும் செமிடிக் இனத்தவர்களுடன் கலந்துவிட்டனர். ஆனால், நகரம் மாத்திரம் எவ்வித மாறுதலும் இன்றி இருந்தது. இந்த மாறுதல்கள் நடைபெறும் காலத்திலும் டெமாஸ்கஸ் மிக முக்கியமான வாணிப நகராக விளங்கியது. இந்நகர், எகிப்திற்கும் மெசபடோமியாவிற்கும் இடையே உள்ள சாலையில் அமைந்திருக்கிறது. மத்திய தரைக்கடலின் கப்பற்றுறைகளிலிருந்து இந்நகரை அடைய ஒரு வாரம் ஆகும். இந்நகர் ஒரு பெரும் தளபதியையோ, நல்ல அரசியல் தலைவனையோ, அல்லது புகழ்வாய்ந்த மன்னனையோ உண்டாக்கவில்லை, அருகிலுள்ள நாடுகளின் ஒரு மைல் அளவுகூட தன்னுடன் இணைக்கவில்லை. உலகில் எல்லா நாடுகளுடனும் வாணிபம் நடத்தியது. வணிகர்களுக்கும், கலைஞர்களுக்கும் பாதுகாப்பளித்தது. மேற்கு ஆசியாவின் பெரும்பான்மையான பாகங்களில் டெமாஸ்கஸ் தன் மொழியைப் பரப்பிற்று.

வாணிபம் பெருகுவதற்கு, பிறநாடுகளுடன் விரைவாகவும், நடைமுறைக்கு ஏற்றதாகவும் உள்ள செய்தி அறிவிப்புத் தேவை, பண்டைச் சுமேரியர்களின் நக எழுத்துமுறை, ஆர்மேயன் வணிகர்களுக்கு பின்பற்றுவதற்கு முடியாதபடி இருந்தது. பழமையும், ஆப்பு வடிவங் கொண்ட வரிவடிவமும் கொண்ட பாபிலோனிய எழுத்தைக் காட்டிலும் விரைவாக எழுதக்கூடிய புதிய எழுத்துக்களைக் கண்டுபிடித்தனர். ஆர்மேயன்களின் பேசும் மொழியும் வாணிப எழுத்தைப் பின்பற்றியது.

பண்டை உலகின் ஆங்கிலமாகத் திகழ்ந்தது ஆர்மே யின். மெசபடோமியாவின் பெரும்பான்மையான பாகங் களில், தங்களது தாய்மொழிபோல, ஆர்மேயன் மொழி யும் புரிந்து கொள்ளப்பட்டது. இம்மொழி வேறுசில நாடு களில் மிகப் பழைய காட்டு இனத்தவர்களின் மொழிபோல் இருந்துவந்தது

கிறித்து, கோடிக் கணக்கானவர்களுக்கு உபதேசம் செய்தபொழுது, தன்னுடன் திரிந்தவர்களுக்குச் சட்டத் தைப்பற்றி மோஸஸ் (Moses) கூறிய பண்டைய யூத மொழியில் பேசவில்லை.

வணிகர்களின் மொழியும், பண்டை மத்தியதரை உலகின் மொழியும் ஆன ஆரமேயன் மொழியில்தான் கிறித்து பேசினர்.

# போனீசியர்கள்

புதுமுயற்சி செய்பவன் வீரமுள்ளவனுகவும், அறி வார்வமும் அதற்கான திடம் உள்ளவனுகவும் இருக்கிருன். உயர்ந்த மலைகளின் அடிவாரத்தில் அவன் வாழ்கிருன். அதைப் போலவே ஆயிரக் கணக்கான மக்களும் செய் கிருர்கள். ஆனுல், அவர்கள் மலையைத் தனியே விட்டு விட்டுத் தங்கள் வாழ்வு, இருப்பிடம் இவற்றுடன் மட்டும் திருப்தி அடைந்து விடுகிருர்கள். புதுமுயற்சியில் ஈடுபட் டுள்ளவர்கள் அதிருப்தி அடைகிருர்கள். மலை தங்கள் கண்களிலிருந்து மறைத்துவைத்திருக்கும் புரியாதவைகள் என்ன என்பது பற்றி அறிய அவாவுறுகின்ருன். அதற் குப்பின் மற்ரெரு மலை இருக்கிறதா? அல்லது சமவெளி இருக்கிறதா? கடல்அலைகளிலிருந்து செங்குத்தான பாறை களுடன் திடீரென்று எழுந்ததா? அல்லது பாலைவனத்தை நோக்கி இருக்கிறதா?

புது முயற்சியில் ஈடுபடுபவன் ஒருநாள் தன் குடும்பம் அன்பும் அமைதியும் அளிக்கும் வீடு இவற்றைவிட்டு மலைமீது ஏறிக் காணச் செல்லுகிருன். அவன் திரும்பி வந்து தன்னுடைய அநுபவத்தைக் கருத்தில்லாத தன் உறவினர்களிடம் கூறுவான். அல்லது உருண்டு விழும் கற்கள், கேடுபுரியும் பனிப்புயல் இவற்ருல் அவன் கொல்ல வும் படலாம். திரும்பி வராத இம்மாதிரிச் சமயங்களில்

அண்டை அயலார்கள், தலையசைத்துக் கொண்டே, "அவ னுக்குக் கிடைத்தது சரிதான்; நம்மைப்போல வீட்டில் தங்கினுல் என்ன?" என்று கேட்பார்கள்.

ஆனல், உலகிற்கு அம்மாதிரி மனிதர்கள்தான் தேவை, அவர்கள் இறந்து அநேக ஆண்டுகளுக்குப் பிறகு, அவர்கள் கண்டுபிடித்தவைகளின் பலனை மற்ற வர்கள் அனுபவிக்கிருர்கள். கண்டுபிடித்தவர்களுக்குச் சிலை நாட்டி அதன்கீழ்த் தகுதியான எழுத்துக்களைப் பொறிக்கிருர்கள்.

உயர்ந்த மலைகளைக் காட்டிலும் மிகவும் பயங்கர மானது மெல்லிய கோடுபோல் தோன்றும் தொலைவி லுள்ள அடிவானம்தான். உலகின் முடிவே அதுதான் என்பதுபோல் தோன்றுகிறது. ஆகாயம் தண்ணீரைத் தொடுவதுபோல் இருக்கும் இங்கு, எல்லாம் இருள் சூழ்ந்து பயங்கரச் சாவு கூத்தாடுவது போலிருக்கிறது. இதைத் தாண்டிச் செல்பவர்களிடம் வானம் இரக்கம் காட்டுகிறது. மனிதன் முதன் முதலில் படகு கட்டிய காலத்திலிருந்து, அநேக நூற்ருண்டுகள் வரை தனக்குப் பழக்கமான இன்பம் தரும் கடற்கரையிலேயே தங்கி அடி வானத்தினின்றும் விலகியே இருந்தான். அதன்பிறகு பயம் என்பதேயறியாத போனீசியர்கள் வந்தனர். கரையி லிருந்து கண்ணுக்கெட்டுந் தூரத்திற்கு அப்பால் அவர் கள் சென்றனர். (திடீரென்று) தடையாக நின்ற கடல், அமைதியான வாணிபப் பாதையாக மாறியது. அடி வானத்தைப்பற்றிய பயங்கரமான செய்திகள் எல்லாம் வெறும் கற்பனையாக ஆனது. இந்தப் போனீசிய மாலுமி கள் செமிட்டிக் (Semitic) இனத்தவர்கள். இவர்களின் முன் னோர்கள் அரேபியப் பாலைவனத்தில், பாபிலோனியர்கள்,

யூதர்கள் போன்ற இனத்தவர்களுடன் வாழ்ந்தனர். ஆனால், யூதர்கள் பாலத்தீனத்தைப் பிடித்துக்கொண்ட பொழுது, போனீசியர்களின் நகர்கள் நூற்றாண்டுக் கணக்கில் இருந்ததால் பழையனவாக இருந்தன.

போனீசிய நகர்களில் முக்கியமாக இரண்டு, வாணிப நகர்களாக இருந்தன. அவற்றில் ஒன்றின் பெயர் டையர் ( Tyre ); மற்றொன்று சைடன் ( Siden ) எனப்படும். இந்நகர்கள் உயர்ந்த மலைக்குன்றுகளின்மீது, எதிரிகள் எளிதில் கைப்பற்ற முடியாதபடி கட்டப்பட்டிருந்தன. மத்தியதரைக் கடலில் அங்கும் இங்கும் சென்று கிடைக்கும் பொருள்களைச்சேர்த்து, மெசெபடோமியாவில் வாழும் மக்களுக்கு அளித்து வந்தன. முதன் முதலில் இந்த மாலுமிகள், பிரான்சு, ஸ்பெயின் முதலிய நாடுகளுடன் மாத்திரம் பண்டமாற்றுச் செய்து அதனால் கிடைத்த தானியம், உலோகம் இவற்றுடன் தாய் நாட்டிற்குத் திரும்பினர். கடைசியாக, ஸ்பெயின், இத்தாலி, கிரேக்கம் முதலிய நாடுகளின் கடற்கரைகளில் வாணிபத்தைப் பெருக்க வலுவுள்ள கோட்டைகளைக் கட்டினர். விலைமதிப்புள்ள தகரம் கிடைக்கும், தொலைவிலுள்ள சிசிலி (Scilly) தீவுகளிலும் கோட்டைகள் கட்டினர். ஐரோப்பாவின் நாகரீகமற்ற காட்டுமிராண்டிகளுக்கு இந்த வாணிபத் தலங்கள் அழகும் ஆடம்பரமும் நிறைந்த கனவுக்காட்சிகளாகத் தென்பட்டன. தங்களுக்குத் தெரியாத கிழக்கு நாடுகளிலிருந்து, தாங்கள் அதிகம் விரும்பும் வாணிபப் பொருள்களைச் சுமந்துகொண்டு, துறைமுகங்களில் நுழையும் படகுகளைப் பார்க்க ஆவல் கொண்டு, கோட்டைச் சுவர்களை ஒட்டி வாழத் தங்களை அநுமதிக்குமாறு வேண்டினர். போனீசியர்களின் கோட்டையைச் சுற்றித் தங்கள் குடிசைகளை விட்டு, மரத்தாலான சின்னஞ்சிறு வீடுகளைக் கட்ட ஆரம்பித்தனர். இம்மாதிரியாக, அநேக வாணிபத்

தலங்கள், அண்டை அயலில் இருக்கும் மக்கள் வாணிபத்திற்காகக் கூடும் சந்தைகளாக மாறிற்று. மார்சைல்ஸ் (Marsailles), கார்டிஸ் (Cadiz) போன்ற இன்றைய பெரும் நகரங்கள் போனீசிய சந்ததிகள் எனப் பெருமைப்படுகின்றன. ஆனல், இவற்றின் பழம் பெரும் நகர்களான டைர் சிடோன் போன்றவைகள் மறைந்து, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக மறக்கப்பட்டுவிட்டன. போனீசியர்களும் மாண்டு மறைந்தனர். இது மிகவும் துயரமான நிகழ்ச்சி; ஆனல், அவர்களுக்குத் தகுதியான முடிவு. அதிக உழைப்பில்லாமல் போனீசியர்கள் செல்வந்தர்களாயினர். ஆனல், அறிவுடன் அச்செல்வத்தைச் செலவிடும் வழி தெரியாமலிருந்தார்கள். கல்வியறிவிற்கோ அல்லது புத்தகங்களுக்கோ அவர்கள் ஒருபொழுதும் கவலைப்பட்டதில்லை. அவர்கள் கவலை எல்லாம் பணத்தைப் பற்றித்தான். உலகெங்கும் அடிமை வர்ணிபம் செய்து வந்தார்கள். அயல் நாடுகளிலிருந்து வந்து குடியேறிய மக்களைத் தங்கள் தொழிற்சாலைகளில் வேலை செய்யுமாறு கட்டாயப்படுத்தினர்கள். சந்தர்ப்பம் கிடைத்த பொழுதெல்லாம் மற்றவர்களை ஏமாற்றினர்கள். இவற்றல் மத்தியதரைக் கடற்கரையில் உள்ள மற்ற மக்கள் போனீசியர்களை வெறுத்தனர்.

போனீசியர்கள் பலம் பொருந்தியவர்களாகவும், திறமை மிக்க மாலுமிகளாகவும் இருந்தபோதிலும், நேர்மையான வியாபாரம், உடனே மோசடி; வியாபாரத்தால் உடனுக்குடன் கிடைக்கும் லாபம் இவற்றில் இரண்டாவது வழியையே பின்பற்றினர். உலகில் பெரும் கப்பல்களைச் செலுத்தும் மாலுமிகளாகப் போனீசியர்கள் மட்டும் இருந்த வரையில் மற்ற நாடுகளுக்கு அவர்களின் உழைப்பு தேவைப்பட்டது. சுக்கானைத் திருப்புவதற்கும், பாய் மரம் விரிப்பதற்கும் மற்றவர்கள் கற்றுக்கொண்டதும்

ஏமாற்றிவந்த போனீசியர்களிடமிருந்து விடுபட்டனர். அதிலிருந்து டையர், சிடான் நகரங்கள் ஆசியாவின் வாணிபத்தில் தங்களுக்கு இருந்த செல்வாக்கை இழந்து விட்டன. கலை, விஞ்ஞானம் இவற்றை அவர்கள் வளர்க்க வில்லை. ஏழு கடல்களையும் கடந்து அவற்றை லாபகர மான தொழிலாக்க மட்டுமே தெரிந்திருந்தனர். இம்மாதிரி யான வாய்ப்பு, வசதிகளால் மட்டும் ஒரு நாடு நீடித்து அமைந்துவிட முடியாது. போனீசியர்களின் நாடு வெறும் பணத்தை எண்ணும் இடமாகவே இருந்தது. அதில் உயிர், உணர்ச்சி இவை ஒன்றும் இல்லை. பணம் நிரம்பிய பெட்டியையே உயர்ந்ததாகக் கருதியதால் போனீசியர்கள் முடிவில் அழிந்தொழிந்தனர்.

# வாணிபமும் எழுத்துக்களும்

பேச்சுக்களைச் சிறிய உருவங்களின் வடிவில் எகிப்தி யர்கள் காப்பாற்றி வந்ததைப்பற்றி ஏற்கனவே கூறி னேன். மெசபடோமியா மக்கள் வாணிப வசதிக்காகச் சொந்த நாட்டிலும, வெளிநாட்டிலும் பின்பற்றிவந்த ஆப்பு எழுத்து முறைபற்றியும் விளக்கமாகக் கூறினேன்.

நம்முடைய எழுத்துக்கள் எப்படித் தோன்றின? பிறந்த நாளிலிருந்து இறக்கும்வரை நம் வாழ்வு முழுவதும் நம்மைத் தொடர்ந்துவரும் எழுத்துக்கள் எங்கிருந்து வந்தன? அவைகள் எகிப்தியர்களுடையதா? பாபிலோனி யர்களுடையதா அல்லது அராபியர்களுடையதா? அல் லது முற்றிலும் மாறுபட்ட ஒன்று? இவைகள் எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்ந்துதான் நம்மொழி ஏற்பட் டது. நம்முடைய பேச்சைத் திருப்பித் தருவதில் இன் றைய எழுத்துக்கள் திருப்திகரமான கருவிகள் அல்ல. என்றுவது ஒருநாள், ஒரு அறிஞன், ஆங்கில ஒலிக்குத் தகுந்த வார்த்தைகளைத் தரும் எழுத்துக்களைக் கண்டு பிடிப்பான். அதனுடைய குறைபாடுகளுக்கு நடுவே, இன்றைய எழுத்துக்கள் அன்ருட வேலையை அழகாகவும், எளிதாகவும் செய்கின்றன. இவற்றைப் போலவே, மிக வும் துள்ளிதமானதும், கச்சிதமானதுமான 'அளவை கள்', எழுத்துக்கள் கண்டுபிடிக்கப்பட்டுப் துபத் ஆண்டு களுக்குப் பிறகு, தொலைவிலுள்ள இந்தியாவிலிருந்து

ஐரோப்பாவிற்கு வந்தது. இந்த எழுத்துக்களின் பண்டைய வரலாறு பெரும் புதிராக இருக்கிறது. இதைத் தெரிந்து கொள்ள அநேக ஆண்டுகள் சிரமத்துடன் உழைக்க வேண்டும். அறிவுமிக்க இளம் எழுத்தாளன் ஒருவனுல், நம் எழுத்துக்கள் திடீரென்று கண்டுபிடிக்கப் படவில்லை என்பது மாத்திரம் நமக்குத் தெரிகிறது. எத்தனையோ நூற்றுண்டுகளுக்குள் மிகச் சிக்கலான பழைய முறைகளின்றும் எவ்வளவோ முன்னேறியிருக்கிறது.

சென்ற பாடத்தில், அறிவுத்திறமிக்க ஆரமேய வணிகர்களின் மொழிச் செய்தியை அனுப்பி மேற்கு ஆசியாவின் எல்லாப் பாகங்களிலும் பரவியிருப்பதைப் பற்றிச் சொன்னேன். போனீசியர்களின் மொழி, ஆரமேயர்களின் மொழியைப்போல அவ்வளவு பரவி இருக்கவில்லை. ஒரு சில வார்த்தைகளைத் தவிர, எஞ்சி இருப்பவற்றின் உச்சரிப்பு எப்படி என்பது தெரியாது. மத்திய தரைக் கடற்கரைப் பகுதிகளில் போனீசிய எழுத்துக்கள் மாத்திரம் பரவியிருந்தன. போனீசியர்கள் குடியேறிய ஒவ்வொரு இடமும் அவர்களின் எழுத்துக்கள் பரவ வழி செய்தது. கலையையோ அல்லது விஞ்ஞானத்தையோ போற்றி வளர்க்காத போனீசியர்கள், அவர்களைக் காட்டிலும் முன்னேற்றத்திலிருந்த பல நாட்டினர் பழைய சிக்கலான எழுத்து முறையைக் கையாண்டு வந்த சமயத்தில், மிகச் சுருக்கமானதும் அழகானதுமான புது எழுத்து முறைகளை எப்படிக் கண்டுபிடித்தனர் என்பது தெரியவில்லை!

எல்லாவற்றிற்கும் மேலாக, போனீசியர்கள் பெரும் வணிகர்களாக இருந்தனர். இயற்கை எழிலைக் கண்டு ரசித்திட அவர்கள் பிறநாடுகளுக்குப் பிரயாணம் செய்யவில்லை. ஐரோப்பாவிற்கும் மிகத் தொலைவிலுள்ள

ஆப்பிரிக்காவிற்கும் பொருளீட்டும் பொருட்டு மிகப் பயங்கரமான பிரயாணம் செய்தார்கள். டையர், சிடான் நகர்களில் ஒவ்வொரு நிமிடமும் பணமாகக் கருதப்பட்டது. வரி வடிவத்திலும், சுமேரியர் கண்ட வழியிலும் வாணிபம் சம்பந்தமான செய்தி, குறிப்பு இவைகள் எழுதுவதால் கணக்காயர்கள் அதிக நேரம் செலவிட நேரிட்டது. இந்த நேரத்தை வேறு அதிகப் பயனுள்ள வழியில் செலவழித்தால் பணம் நிறையக் கிடைக்கும் என்று அவர்கள் எண்ணினர்.

இன்றைய தொழில் உலகத்தில், மிகப்பழைய முறையான கடிதங்களை எழுதச் சொல்லும் முறை, வேகமாகச் செல்லும் நாகரீக உலகத்திற்கு ஒத்துவராத மெதுவான வழியாக இருந்தது. ஓர் அறிஞன் வேட்டைநாய் முயலைப் பின்பற்றுவதுபோல, புள்ளி, கோடுகள் இவற்ருல் பேசும் வார்த்தைகளைக் குறிக்கும் முறையைக் கண்டான். இந்த முறையைச் 'சுருக்கெழுத்து' (Short hand) என அழைக்கிருேம்.

போனீசியர்களும் இதைப் போலவே செய்தனர். எகிப்தியர்களின் வரி வடிவத்திலிருந்து சிலவற்றை எடுத்துப் பாபிலோனியர்களைப் பின்பற்றி அநேக ஆப்பு வடிவ எழுத்துக்களை உண்டாக்கினர். விரைவாக எழுதுவதற்காகப் பழைய முறையிலிருந்த அழகான தோற்றங்களைக் கைவிட்டனர். பண்டைய எழுத்துக்களின ஆயிரக்கணக்கான வடிவங்களிலிருந்து, மிக அடக்கமானதும், குறைந்ததுமான இருபத்தி இரண்டு எழுத்துக்களை ஆக்கினுர்கள், தங்கள் நாட்டில் முதன் முதலில் புது எழுத்துக்களில் முயற்சி செய்தனர். பயன் தந்ததும் வெளி நாடுகளுக்கும் அவற்றைப் பரப்பினுர்கள்.

எகிப்தியர்கள், பாபிலோனியர்கள் இவர்களிடையே எழுதுதல் ஒரு பெரிய காரியமாக இருந்தது; ஒரு புனித

மான செயலாகக் கருதப்பட்டது. எழுத்துக்களின் முன் னேற்றத்திற்காகச் சொல்லப்பட்ட குறிப்புக்கள் எல்லாம் மத ஆசாரத்திற்கு விரோதமானவைகள் என வெறுத்து ஒதுக்கப்பட்டன. மதத்தைப் பற்றிக் கவலையடைந்தவர் தோற்றபொழுது, கடவுளைப்பற்றிக் கவலைப்படாத போனீ சியர்கள், வெற்றி பெற்றார்கள். பழமை எண்ணத்தில் மூழ்கி இருந்த மெசபடோமியா, எகிப்து ஆகிய நாடு களில், போனீசியர்கள் தங்கள் புதிய எழுத்துமுறையைப் பரப்ப முடியவில்லை. ஆனால், எழுத்துமுறை பற்றி ஒன் றும் தெரியாமலிருந்த மத்தியதரைப் பகுதி மக்களிடையே போனீசியர்களின் எழுத்துக்கள் பரவின. இந்தப் பரந்த கடற்பகுதிகளின் மூலைமுடுக்குகளில் எல்லாம் பாழடைந்த கட்டிடங்கள், கம்பங்கள், பாத்திரங்கள் இவைகளில் போனீசிய எழுத்துக்கள் பொறிக்கப்பட்டு இருக்கின்றன.

இந்தோ—ஐரோப்பிய கிரேக்கர்கள் ஏஜியன் கடலில் (Aegean Sea) உள்ள தீவுகளில் குடியேறியதும், அந்த அந்நிய எழுத்துக்களைத் தங்கள் சொந்த மொழியுடன் உப யோகித்தனர். செமிடிக் இனத்தைச் சேர்ந்த போனீசியர் களுக்குச் சில கிரேக்க ஒலிகள் புரியாததால், புதிய எழுத் துக்களைக் கண்டுபிடித்துச் சேர்த்துக் கொண்டனர். கிரேக்கர்கள் இத்துடன் நின்றுவிடவில்லை. பேச்சுக்களை எழுதிவைக்கும் முறையில் முன்னேற்றம் கண்டனர். ஆசி யாவின் பண்டை மக்களின் எழுத்துக்களில் எல்லாம் பொதுவான முறை ஒன்று இருந்தது.

மெய்யெழுத்துக்கள் (Consonants) திருப்பிக் கூறப்பட் டன. படிப்பவர்கள் உயிரெழுத்துக்களை (Vowels) யூகித் துக் கொள்ள வேண்டி இருந்தது. நமக்குத் தோன்றுவது இதுபோல் அவ்வளவு கடினமல்ல. இன்றைய செய்தித் தாள்களில் அச்சிடப்படும் அறிவிப்புகளிலோ, அல்லது விளம்பரங்களிலோ அடிக்கடி நாம் உயிரெழுத்துக்களை

(Vowels) விட்டுவிடுகிறோம். பத்திரிகையாளர்களும், தந்தி மூலம் செய்தி அனுப்புபவர்களும் தங்களுக்கெனத் தனி மொழியைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இம் மொழியில் தேவைக்கு அதிகமாக இருக்கும் உயிரெழுத்துக்களைத் தள்ளிவிட்டு, தேவைப்படும் மெய்யெழுத்துக்களை உபயோகிக்கிறார்கள். இச்செய்தி மொழிபெயர்க்கப் படும்பொழுது மெய்யெழுத்துக்களைத் தொடர்ந்து வரும் உயிர் எழுத்துக்களும் சேர்ந்து செய்தியை விளங்கவைக்கிறது.

ஆனால், மேற்கூறிய ஒழுங்கற்ற முறையில் உள்ள எழுத்துக்கள் எப்பொழுதும் பரவ முடியாது. கிரேக்கர்களும் 'ஏ'(a), 'இ'(e), 'ஐ'(i), 'ஓ'(o), 'யூ'(u) இவற்றைக் குறிக்க, மிகவும் அதிகப்படியான சங்கேதங்களை உண்டாக்கினார்கள். இதன் பிறகு, எதையும் எல்லா மொழிகளிலும் எழுதுவதற்குத் தகுந்த எழுத்துக்களைப் பெற்றனர். கிறித்து பிறப்பதற்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இந்த எழுத்துக்கள் அட்ரியாடிக் (Adriatic) கைக்கடந்து ஏதன்ஸிலிருந்து (Athens) ரோம் (Rome) வரை பரவியிருந்தது. உரோமானிய வீரர்கள், இந்த எழுத்துக்களை' மேற்கு ஐரோப்பாவின் மூலை முடுக்குகளுக்கு எல்லாம் பரப்பி, நம் முன்னோர்களுக்கு இந்தச் சிறிய போனீசிய வரி வடிவங்களைக் கற்பித்தனர். பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்குப் பிறகு, பைசாண்டைன் (Byzantine) சமயத்தைப் பரப்புபவர்களால், இந்த எழுத்துக்கள் விரிந்து படர்ந்த ரஷியப் பாழ்வெளிகளில் பரப்பப்பட்டன. தங்கள் எண்ணங்களை எழுத்தில் தேக்கிவைக்கவும், குழந்தைகளுக்கும் பேரக் குழந்தைகளுக்கும் தங்கள் அறிவு பயன் தருவதற்காக அதைப் போற்றி வைக்கவும், இன்றைய பாதி உலகத்தின் பெரும் பகுதியினர் உபயோகிப்பது ஆசியாவின் எழுத்துக்களேயாகும்.

## பண்டைய உலகின்

# இறுதிக்காலம்

இதுவரை, பண்டை மனிதனின் கதை வியக்கத்தக்க
செயலாக இருப்பதை அறிந்தோம். நைல் நதிக்கரையில்,
மெசபடோமியாவில், மத்தியதரைக் கடற்கரைப் பகுதி
களில்வாழ்ந்த மக்கள் செயற்கரிய செயல்களைச் செய்து
முடித்தனர். அறிவுசால் மன்னர்கள் பெரும் காரியங்
களைச் செய்தனர். நாடோடிப் பிராணியாக வாழ்ந்த
மனிதன் வரலாற்றில் முதன் முதல் தங்கியிருந்த இடம்
இங்குதான். தனக்கென வீடுகள், கிராமங்கள், பெரிய
நகரங்கள் இவற்றை மனிதன் கட்டிக் கொண்டான். நாடு
கள் அமைத்தான்; வேகமாகச் செல்லும் படகுகளைக்
கட்டவும், செலுத்தவும் கற்றுக் கொண்டான். வானத்
தைக் கண்டான். தனக்குள்ளாகவே சில பெரிய ஒழுக்
கங்களைச சட்டமாக ஆக்கினான். அவன் தொழும் ஆண்ட
வனுக்குச் சமமாக அவற்றைக் கருதினான். விஞ்ஞானம்,
கலை இவற்றில் இன்று நாம் இவ்வளவு முன்னேற்றம்
அடைவதற்கு அன்றே அஸ்திவாரமிட்டான். உண்ணும்
உணவிற்கும், இருக்கும் இடத்திற்கும் மட்டுமின்றி வாழ்
வின் உன்னத இலட்சியத்திற்குப் பாடுபடத் தூண்டியவன்
அவனே. இவை எல்லாவற்றிற்கும் மேலாக, ஒலியை
எழுத்துவடிவில் காப்பாற்றும் முறையைக் கண்டு
பிடித்துத் தன் அனுபவங்களைத் தன் சந்ததிகளுக்குப்

பயன்படும் வரையில் கொடுத்தான். இச் செய்திகளின் பயனாக, இன்று மனிதன் இயற்கையின் போக்கை, நிகழ்ச்சியைக் கட்டுப்படுத்தி தனக்கு பயன் தரும் வழியில் பாடுபடுகிறான்.

இவ்வளவு உயர்ந்த நலன்களுடன் வாழ்ந்த பண்டை மனிதனுக்கு ஒரு பெரும் குறைபாடு இருந்தது, பரம்பரைப் பழக்க வழக்கங்களுக்கு அவன் தீராத அடிமையாக இருந்தான். தேவையான கேள்விகளை அவன் கேட்கவில்லை. "எனக்கு முன் என் தந்தை இதே காரியங்களைச் செய்தார். என் தந்தைக்குமுன் என் பாட்டனார் செய்தார்; இருவரும் நன்றாகவே வாழ்ந்தனர். அதே காரியங்கள் எனக்கும் நன்மை செய்யத்தான் வேண்டும். ஆகவே, அவற்றை மாற்றக்கூடாது என்று எண்ணினான் எடுத்துக் கூறப்படுவதை அப்படியே ஏற்றுக்கொள்ளும். இந்தப் பண்பு, பொதுவான மிருக இனத்தினின்றும் நாம் முன்னேற ஒருபொழுதும் உதவாது என்பதை அவன் மறந்தான். தன் முன்னோர்கள் செய்தபடி தன் சுருண்ட வாலின் உதவியால் மரத்துக்கு மரம் தாவிச் செல்லும் வழியைப் பின்பற்ற மறுத்து, கால்களினால் நடக்க முயன்ற ஒரு அறிஞன் தோன்றி இருக்க வேண்டும். பண்டைய மனிதன் இந்த உண்மையை அறியாமல், தன் முன்னோர்கள் உபயோகித்த மரப்பாதைகளை உபயோகித்தும், பத்தாயிரம் ஆண்டுகளுக்குமுன் வணங்கப்பட்ட அதே கடவுள்களை வணங்கியும், தன் குழந்தைகளுக்கு அதே மாதிரி நடக்கவும் கற்றுக்கொடுக்கிறான்.

முன்னேறிச் செல்வதற்குப் பதில், ஒரே இடத்தில் நின்றுவிட்டான். அது அழிவிற்கு ஆரமபமாக இருந்தது; மிகப் புதியதும், வலுவானதுமான ஒரு இனம் அடிவானத்தில் தோன்றியதும, பண்டை உலகத்தின் முடிவு நெருங்கியது. இந்தப் புதிய மக்களை இந்தோ–

ஐரோப்பியர்கள் என அழைக்கிறோம். உன்னையும் என்னையும் போல அவர்களும் மனிதர்கள் தான். ஹங்கேரியன் (Hungarian), ஃபின்னிஷ் (Finnish), வடஸ்பெயினில் வழங்கும் பாஸ்க் (the Basque of Northern Spain) முதலிய மொழிகள் தவிர ஏனைய ஐரோபியர்களின் மொழிக்கு மூலாதாரமான மொழியையே இந்தோ-ஐரோப்பியர்கள் பேசினார்கள். நாம் அவர்களைப் பற்றி முதன்முதல் கேள்விப்படுவதற்கு அநேக நூற்றாண்டுகளுக்கு முன்பே காஸ்பியன் கடற்கரையில் (Caspian sea) வீடுகட்டி அவர்கள் வாழ்ந்திருந்தனர்.

ஒருநாள் தங்களுக்குச் சொந்தமான சாமான்களை, தாங்கள் பழக்கிய குதிரைகளின்மேல் ஏற்றினர். ஆடு, மாடு, நாய் முதலியவற்றை ஓட்டிக்கொண்டு உணவையும், உல்லாசத்தையும் தேடி அலைய ஆரம்பித்தனர். அவர்கள் அவ்விதம் கிளம்பக்காரணம் என்ன என்பது நமக்குத் தெரியாது. அவர்களில் சிலர் மத்திய ஆசியாவில் நுழைந்தனர். அவர்கள் ஈரான் பீட பூமியில் உள்ள குன்றுகளில் நீண்ட காலம் வாழ்ந்தனர். இவர்கள் ஈரானியர்கள் அல்லது ஆரியர்கள் (Iranians or Aryans) என்று அழைக்கப்பட்டனர். சூரியன் மறையும் திக்கை நோக்கி மெதுவாகச் சென்ற மற்றவர்கள் மேற்கு ஐரோப்பாவின் பரந்த வெளிகளைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்டனர்.

இதற்குமுன் நான் கூறிய வரலாற்றுக் காலத்துக்கு முந்திய மனிதர்களைப் போலவே அவர்களும் நாகரீகமற்றவர்களாக இருந்தனர். ஆனால், இவர்கள் கடினமான உழைப்பாளர்களாகவும், நல்லவீரர்களாகவும் இருந்ததால், கற்காலத்து மனிதர்களுக்குச் சொந்தமான வேட்டைக் காடுகளையும், மேய்ச்சல் நிலங்களையும் எளிதில் கைப்பற்றிக்கொண்டார்கள்.

அறியாமையில் இருந்தாலும் எதையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற துடிதுடிப்பு இவர்களிடம் இருந்தது. மத்தியதரைக்கடல் வணிகர்களால் தங்களிடம் பரப்பப்பட்ட பண்டை உலக அறிவை, வெகு சீக்கிரத்தில் தங்களுடையதாக்கிக் கொண்டார்கள். எகிப்து, பாபிலோனியா, சால்டியா இவற்றின் காலங்கடந்த அறிவை, அவற்றிற்கு மேலும் நல்லறிவை நாடுவதற்கு படிக்கட்டுகளாகப் பயன்படுத்தினர். பரம்பரைப் பழக்க வழக்கங்களைப்பற்றி அவர்கள் அவ்வளவாகக் கவலைப்படவில்லை. உலகம் அவர்களுடையது; உலகத்தை அறிந்து, தங்களுக்குத் தேவை என்று படுவதை லாபகரமாகச் செய்யவும் விழைந்தனர். அநுபவங்களை யெல்லாம் 'மனித அறிவு' என்னும் கடும் தேர்வின் மூலம் முடிவு செய்ய வேண்டியது தங்கள் கடமை என்று கருதினார்கள். அதன் படி, பண்டை உலகத்தினர் கடக்கமுடியாத தடைகள் என ஒப்புக்கொண்ட எல்லைகளுக்கு—சந்திரனால் ஏற்படுத்தப்பட்ட தடை என அவர்கள் நம்பினார்கள்—அப்பாலும் சென்றார்கள். குறுகிய காலத்திற்குள் புதியதும், வலிவானதுமான நாகரீகம். பண்டை உலகின் உளுத்துப்போன நாகரீகத்தின் இடத்தைப் பிடித்துக் கொண்டது.

# பண்டை மக்களும் - காலமும்

வரலாற்றுக்கு முந்திய மனிதனைப்பற்றிய காலத்தைக் கணக்காகக் குறிப்பிட இயலாது. இப்புத்தகத்தின் முதல் அத்தியாயத்தில் தோன்றும் ஐரோப்பியர்கள் ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன் வந்தனர்.

## எகிப்தியர்கள்

கிறித்து பிறப்பதற்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன் நைல் நதிக்கரையில் நாகரீகம் தோன்றியது.

3400 கி. மு.— பழைய எகிப்தியப் பேரரசு நிறுவப்பட்டது. இதன் தலைநகர் மெம்பிஸ் (Memphis.)

2800–2700 கி.மு.—பிரமிடுகள் கட்டப்பட்டன.

2000 கி. மு.— ஹைக்சாஸ் (Hyksos) என்றழைக்கப்பட்ட அராபியர்களால் பழைய எகிப்தியப் பேரரசு அழிக்கப்படல்.

1800 கி. மு.— ஹைக்சாஸ்களிடமிருந்து தீபிசால் (Thebes) எகிப்து விடுவிக்கப்படல்—புதிய எகிப்துப் பேரரசு.

1350 கி. மு.— ராமேசஸ்(Rameses) அரசன், கிழக்கு ஆசியாவைக் கைப்பற்றல்.

1300. கி. மு.— யூதர்கள் எகிப்தை விட்டு வெளியேறல்.

1000 கி. மு.— எகிப்திய அரசின் அழிவு.

700 கி. மு.— எகிப்து அசிரிய (Assyrian) மாகாணமாக ஆதல்.

650 கி. மு.— எகிப்து சுதந்திர மடைந்து புது நாடு உண்டாதல். சாயிஸ் (Sais) தலைநகர் அந்நியர்கள், குறிப்பாக கிரேக்கர்கள் நாட்டில் ஆதிக்கம் செலுத்துதல்.

525 கி. மு.— எகிப்து பெர்சிய மாகாண மாதல்.

300 கி. மு.— எகிப்து தனி நாடாக ஆகி, அலெக்சாந்தரின் தளபதியான டாலமி (Ptolemy) யால் ஆளப்படுதல்.

30 கி. மு.— டாலமி வமிசத்தின் கடைசி இளவரசி கிளியோபாத்ரா தற்கொலை—எகிப்து ரோமப் பேரரசின் பகுதி யாதல்.

## யூதர்கள்

2000 கி. மு.— கிழக்கு பாபிலோனியாவில், உர் (Ur) பகுதியிலிருந்து அப்ரகாம் (Abraham) கிளம்பி, புதிய இடம் தேடி, ஆசியாவின் மேற்குப் பகுதிக்கு வருதல்.

1650 கி. மு.— யூதர்கள் எகிப்திலுள்ள கோசன் (Goshen) என்பவர்களின் இடத்தைப் பிடித்தல்.

1300 கி. மு.— எகிப்திலிருந்து மோசஸ் (Moses) யூதர்களை அழைத்துச் செல்லல்—சட்டம் இயற்றல்.

1250 கி. மு.— யூதர்கள் ஜார்டன் நதியைக் கடந்து பாலத்தீனத்தில் குடியேறல்.

1055 கி. மு.— (Saul) சால் யூதர்களின் அரசராதல்.

1025 கி. மு.— டேவிட், பலம்பொருந்திய யூதநாட்டின் அரசராதல்.

1000 கி, மு.— சாலமன். ஜெரூசலத்தில் பெரும் ஆலயம் அமைத்தல்.

950 கி. மு.— யூத இராச்சியம், ஜுடா(Judah), இஸ்ரேல் (Israel) என இரு பகுதிகளாகப் பிரிதல்.

900—600 கி,மு.—மதவாதிகள் காலம்.

722 கி. மு.— பாலத்தீனத்தை அசிரியர்கள் கைப்பற்றல்.

586 கி. மு.— பாலத்தீனத்தை நெபுசாட்நிசார் (Nebuchadnezzar) ஜெயித்தல் — பாபிலோனியக் குடியேற்ற நாடு.

537 கி. மு,— பெர்சிய மன்னன் சைரஸ்(Cyrus) யூதர்களைப் பாலத்தீனத்திற்குள் அநுமதித்தல்.

167—130 கி. மு,—மெக்காபீசின் (Maccabees) கீழ் யூத சுதந்திரத்தின் கடைசிகாலம்.

63 கி. மு.— பாம்பியஸ்(Pompeius)பாலத்தீனத்தை ரோமப் பேரரசுடன் இணைத்தல்.

40 கி. மு.— யூதர்களின் அரசன் ஹெராட் (Herod).

70 கி. பி.— டைட்டஸ் (Titus) பேரரசர் ஜெரூசலத்தை அழித்தல்.

## மெசபடோமியா

4000 கி. மு.— டைகிரிஸ் (Tigris), யூப்ரிடிஸ் (Euphrates) நதிகளுக்கு இடைப்பட்ட நிலத்தை சுமேரியர்கள் கைப்பற்றல்.

2200 கி. மு.— பாபிலோனிய மன்னன் ஹமுராபி (Hammurapi) தன் மக்களுக்கு புகழ் பெற்ற சட்டத்தை வழங்குதல்.

1900 கி. மு.— நினேவா (Nineveh)வைத் தலைநகராகக் கொண்டு அசிரிய நாடு அமைதல்.

950—650 கி. மு.—மேற்கு ஆசியாவில் அசிரியா தலைமை தாங்கல்.

700 கி. மு.— அசிரிய மன்னன் சார்கன் (Sargon) பாலத்தினம், எகிப்து, அரேபியா முதலிய நாடுகளை ஜெயித்தல்.

640 கி. மு.— அசிரிய ஆட்சிக்கு எதிராக மெட்சு (Medes)கள் கலகம் விளைத்தல்.

530 கி. மு.— ஸ்கைத்தியர்கள் (Scythans) அசிரியாவைத் தாக்குதல். நாடு முழுவதும் குழப்பம்.

608 கி. மு — நினேவா அழிக்கப்படல்; அசிரியா தேய்ந்து மறைதல்.

608—538 கி. மு.—பாபிலோனிய ஆட்சியை சால்டியர்கள் மறுபடியும் நிறுவுதல்.

604—561 கி. மு.—நெபுசாட்நிசார் (Nebuchadnezzar) ஜெருசலத்தை அழித்து, போனீசியா

வைக் கைப்பற்றி, பாபிலோனை (Babylon) நாகரீகத்தின் நிலைக்களமாக ஆக்குதல்.

538 கி. மு.— மெசெபடோமியா, பெர்சியாவின் மாகாணமாதல்.

330 கி. மு.— மாவீரன் அலெக்சாந்தர் மெசெபடோமியாவைக் கைப்பற்றல்.

## பொனீசியர்கள்

1500—1200 கி. மு.—பேபானீசிய வாணிப நகர் சிடான் (Sidon).

1100–950 கி. மு.—டைர் (Tyre) போனீசிய வாணிப நகரமாதல்.

1000–600 கி. மு.—போனீசியர்களின் காலனி ஆட்சி பரவுதல்,

850 கி. மு.— கார்த்தேஜ் (Carthage) கண்டுபிடிக்கப்படல்.

586—573 கி. மு.—நெபுசாட் நிசார் டைர் நகரைக் கைப்பற்றல். நகர் பிடிக்கப்பட்டு, அழிக்கப்படல்.

538 கி. மு,— போனீசியா, பெர்சியாவில் ஒரு மாகாணமாதல்.

60 கி. மு.— போனீசியா, உரோமப் பேரரசின் ஒரு பகுதியாதல்,

## பெர்சியர்கள்

இந்தோ—ஐரோப்பியர்கள், இந்தியாவிற்குள்ளும், ஐரோப்பாவிற்குள்ளும் நுழைந்த காலத்தைக் குறிப்பிட்

டுக் கூற இயலாது. சாராதுச்ஷ்ட்ரா (Zarathustra) பெர்சியர்களின் குரு. உயர்ந்த ஒழுக்க முறைகளை வகுத்தவர். இவரது காலம் 1000 கி மு. என்று கூறப்படுகிறது.

650 கி. மு.— இந்தோ — ஐரோப்பிய மெட்சுகள் (Medes), பாபிலோனியாவின் கிழக்கு எல்லையில் நாடு அமைத்தல்.

550—330 கி. மு.—பெர்சிய ஆட்சி- இந்தோ—ஐரோப்பியர்களுக்கும், செமைட்சுகள் (Senites) எனபவர்களுக்கும் தகராறு ஆரம்பம்.

525 கி. மு.— பெர்சிய மன்னன் காம்பைஸஸ் (Cambyses) எகிப்தைக் கைப்பற்றல்.

520—485 கி. மு.—பெர்சிய மன்னன் டாரியச் பாபிலோன் (Babylon), நகரைக் கைப்பற்றி, கிரேக்க நாட்டின் மீது படையெடுத்தான்.

485—465 கி. மு.—கிழக்கு ஐரோப்பாவில் ராச்சியத்தை நிறுவ க்செர்செஸ் (Xerxes) மன்னன் முயன்று தோல்வி அடைதல்.

330 கி. மு.— கிரேக்க மாவீரன் அலெக்சாந்தர் மேற்கு ஆசியா, எகிப்து முதலிய நாடுகளை ஜெயித்தல். பெர்சியா கிரேக்க மாகாண மாதல்.

செமிடிக் (Semetics) இனத்தவர்களால் ஆதிக்கம் செலுத்தப்பட்ட பண்டை உலகம் ஏறத்தாழ நாற்பது நூற்றுண்டுகள் வரை நீடித்தது. நான்காவது நூற்றுண்டில், கிறித்து பிறப்பதற்கு முன் பண்டை உலகம் அழிந்தொழிந்தது. ஐரோப்பாவில் குடியேறிய இந்தோ — ஐரோப்பியர்கள் காலம் நமக்குத் தெரியவில்லை. இவர்

களுக்கு ஆசானுக விளங்கியது; மேற்கு ஆசியாவும், எகிப்துமேயாகும்.

நான்காவது நூற்றுண்டில் கிறித்து பிறப்பதற்கு முன், இந்தோ—ஐரோப்பியர்கள் தங்கள் ஆசானைத் தோற்கடிக்கும் விதத்தில் மற்ற நாடுகளை வென்றனர்.

330 கி. மு.வில் நடந்த மாவீரன் அலெக்சாந்தரின் புகழ்பெற்ற படையெடுப்பிற்குப் பிறகு, எகிப்து, மெசெபடோமியா இவற்றின் நாகரீகம் முடிவடைந்து, கிரேக்க நாகரீகம் தலைதூக்கி நின்றது.

**முற்றும்**



